சீரிழிவுக்கு மேகாதிக்குளிகை

கொடுத்திடவேயதிசாத்திரமப்பா கூரானவசிரணத்துக் குறவு
கேளு, அடுத்துநீவழுதலையினிரிலாட்டு வக்கினிமாந்தத்துக்களையக்
கேளு, கடுத்துநடையதிரிகடுகுபொடியிலாட்டு கனவாய்வுபோகமென்
றுலியாழுஞ்சொல்வோம், படுத்திடுமேயெவ்வகையுந்நிவர்த்தியாகப்
பஞ்சமூலங்கியாழமடாபத்திகேளே. உ௱உ

பத்தியுறுமேகாதிக்குளிகைசொல்லப் படானசீரிழிவுவனைத்து
மோடும், புத்தியுறுஞ்சூதயப்பாகழஞ்சுபத்து புகழானவப்பிரேகச்சிவ
ப்பிரெட்டி, சித்தியுறுங்கெந்தியப்பாவைப்பதற்குத் திருமால்தன்தா
ரமதுவைம்பதாகும், வெற்றியுயர்சலாசத்துககழஞ்சியைந்து மேலா
னகாரீயச்செந்தூரங்கேளே. உ௱௩

செந்தூரங்கழஞ்சியுமோர்மூப்பதாகுஞ் சேர்த்திடவேமேல்மரு
ந்தைச்செப்பக்கேளு, பந்தூரப்பருத்திவிதைதேற்றான்வித்து பாங்கா
னவெண்குன்றிவித்துதானும், கந்தூரப்புளியம்விதைதோடுநல்ல கற்
கடகச்சிங்கிவிவைசமனாய்நீயும், மந்தூரக்கழஞ்சியைந்துநிறுத்துவாங்
கி யப்பனேமரபஞ்சன்றாக்குறாக்கே. உ௱௪

மஞ்சளுங்கஸ்தூரிமஞ்சள்தானும் மன்னர்பணிநிலப்பனைவே
ர்சித்திரமூலம், மிஞ்சாமற்பப்பத்துக்கழஞ்சுதாக்கு வெம்புவெள்வே
லக்கருங்காலிகருவேலம்பிசினும், தூஞ்சவேகழஞ்சுபத்துதென்னம்பா
ளைத் தூளங்கேழும்மூன்றுகழஞ்சுதாக்கு, தஞ்சமுறுந்திரிகடுகுவென்
பதாகுந் தவிர்த்திடுவினங்களெல்லாம்நிறுத்துக்கொள்ளே. உ௱௫

கொள்ளடாயாவரையுமருகிலக்கை கோடாயிலைச்சாறதனைப்பி
ழிந்துநீயும், தள்ளடாமூன்றுதினம்வெவ்வேறாகத் தளராமல்மாட்டி
வாங்கிமைந்தா,எள்ளடாதேற்றான்விரைப்பிரமாணத்தி லென்மகனே
திரட்டியேயெடுத்துவைத்து, உள்ளடாகுளிகையொன்றுதேனில்விய
மேகமென்றதிருபதையும்வெல்லுங்காணே. உ௱௬

சீரிழிவுக்குக்கியாழம்.

வெல்லுதற்குக்கியாழவகைசொல்லக்கேளு மேன்பொடிக்கியா
ழமிடுதூடரிசண்டை,நல்லசுண்டிநீர்ப்பூலாஞ்சாகடலிருஞ்சி நலமான
இப்பவலாவரைபொன்முசட்டை, வல்லவேவேலுவிலைமுத்தக்காய்
திரிபலையும் வாவீறுபரித்தேற்றம்வகைநேரேதான், புல்லவேதூளா
க்கிப்பாண்டத்திட்டுப் புதுச்சட்டிக்குள்ளொருபிடிதான்போடே*()

பொட்டங்கேசலம்விட்டுரவியிற்சீலை புகழாகவேடுகட்டிமூன்று சாமம், நீட்டங்கேதிரும்பவதைக்குழுக்கிக்காய்ச்சி நேராகக்காற்படிக் குள்கழஞ்சுதேன்தான், ஊட்டங்கேகாலத்திலிரவிற்கொள்ளு உத்த மனைபொன்முசட்டைவேரிறேடு, நாட்டங்கேதிரிகடுகுமூத்தக்கா ய் நலமானமூங்கிலிலைதிரிபலைநோமே. உ௱அ

நேராகக்கழஞ்சிரண்டுதூக்கிக்கொண்டு நீர்படிதானரண்டுவிட்டு வுழக்காய்க்காய்ச்சி, சீராகக்கொண்டிடவேகிரிகைகேளு சிய்மேகமது மேகங்காளமேகம், வாராததசமேகம்மத்திமேகம் வறளவேகனல்மே கம்வாதமேகம், போகவுருக்குமாங்கிஷமேகம் புகழாகாண்டுபத்து மேகம்போமே. உ௱௯

சயம் சுவாசகாசத்துக்குக்கண்டங்காரிநெய்.

போகாதசயகாசம்போகவைந்தா புகழ்கண்டங்காரிநெய்யைப்பு கலக்கேளு, வாகாகச்சமூலமெல்லாமிடித்துச்சாறு வாங்கடாபடியொ ன்றுநெய்தானொன்று, பாகமுடன்கலந்திதன்மேற்பாகங்கேளு பரு நெல்லிசிறுதேககுசிற்றாத்தை, சேகரமாம்வெட்பாலைசிழ்க்காய்நெல் லி சிறப்பானசிறுகாஞ்சோறிவேறே. உ௱௰

சுவாசகாசத்திற்குத்திப்பிலிநெய்.

வேரானநெருஞ்சிவேர்தாளிசப்பத்திரி மீறுமல்லவைகையொன்று கழஞ்சுகாலு, சீராகவூட்டியேநெய்யிலிட்டுச் சிவக்கவேகாய்ச்சியதைவா ங்கிக்கொண்டு, நேராகத்தட்டிடையேயருந்தச்சொல்லு நிமிஷைத்திற்கா சவைகைநிவர்த்தியாகும், தீராதசுவாசசயகாசத்திற்குத் திப்பிலிநெய்த ன்னையினிச்செப்பககேளே. உ௰௧

கேளப்பாநிலவேம்புகன்னரிவேரும் கிரிகையுறுங்குருவிஞ்சிவா மிச்சம்வேர், நாளப்பாசந்தனமும்பேராமல்லி நலமானநெல்லிக்காய்சி ழ்க்காய்நெல்லி, தாளாதசீரகமுங்கடுரோணி தனியானவாலுளுவை யரிசிதானும், வாளப்பாதிப்பிலியுமிவையெல்லாந்தான் வகையொன் றுகழஞ்சுநிறைதூக்கிவாங்கே. உ௰௨

வாங்கியதையாட்டிவைத்துவாவின்பால்தான் மைந்தனேநாலு படிவடிதான்கட்டி, பாங்காகநெய்படியுமிரண்டுவிட்டுப் பதமாகச்சிவக் கபின்புவடித்துநீயும், நீங்காதவிளைவுவிசுவாசகாசம் நீர்க்காசஞ்சுரகா சம்பித்தகாசம், தாங்காமலொருமக்கங்கொள்ளும்போது தலைகெட்ட ழால்போலேசாடிப்போமே. உ௰௩

மேகவியாதிக்கெல்லாம் ஏலாதிக்கிருதம்.

சாடிவிழுநோய்க்கெல்லாமேலாதிக்கிருதம் சாற்றுகிறேன்சாறுக யாய்க்கேளுகேளு, சாடிவிழுநெய்யின்றிபெண்ணைதன்னிற் சம்பிரதா

யமாகுமடாசார்ந்துசெய்வாய்,சாடிவளரத்தியாலரசுபித்தி தனித்தனி
யேமுதிர்மரத்தின்சிவந்தபட்டை, சாடியேயிடித்ததனைப்பாண்டத்தி
விட்டுத் தயவாகத்தண்ணீர்தான்றூணியூற்றே. ௨௧௪

ஊற்றியேயெட்டொன்றாய்க்குறுக்கிநீயு முறவுசேரிரண்டுபடி
தாமைநீர்தான்,ஊற்றுவாயிரண்டுபடிவெள்ளறுகுநீர்தா னுததுமனை
ரண்டுபடிநெய்யுமூற்று, ஊற்றிடவேயிரசாலின்முகிழெடுத்து உயர்ந்
துநின்றபத்திமுகழ்மதுரங்கோட்டம்,ஊற்றுவாய்சந்தனமுமிலுப்பை
ப்பூவு முற்பனஞ்சேர்தாமரையின்வளையம்வாங்கே. ௨௧௫

வளையமொடுசெங்கழுநீர்மூலந்தானு மகத்தானவெள்ளறுகுமூ
லந்தானும், இளையவேபேரீந்துநாகப்பூவு மியலானசெண்பகப்பூவிலவ
ங்கப்பத்திரி, தளையவேகச்சோலநாணற்றூது தணித்துவளர்நன்னாரி
நெய்தல்மூலம், விளையவேயமுக்குறாயேலந்தானு மிருமடற்கழஞ்சொ
ன்றுபாலிலாட்டே. ௨௧௬

ஆட்டியபதிற்கலந்துகொண்டுதினந்தானு வளமாகக்காய்ச்சிநீ
யைந்தாநாளில், ஊட்டியேவடித்திறுத்துவுண்டபோது உயர்ந்தகோ
ரிளையெனும்புருக்கித்தீரும், நாட்டியேபித்தவறட்காசம்போகும் நலம
ளிக்குமுளமாந்தைநாடாதென்று, ஊட்டியேநெய்வார்த்தயெண்ணை
சேர்த்து யுறக்காய்ச்சிமுழுகிடவேயுறுதிகேளே. ௨௧௭

உளமாந்தைக்கு கண்டங்காரிநெய்.

உறுதியென்றநீரிழிவுவுள்ளுணர்த்தி யுழலையுறங்கிரந்திமுதற்
பிளவைதீரும், மிறுதியுறுங்காலெரிவுமேலெரிவுநீரு மிதுதயிலநெய்
கூடிற்கெருதமாகும், பெறுதியுறுமநல்லவர்க்குமிந்தநூல்தான் பேசுகி
றேனுளமாந்தையெட்டுந்தீரச், சுருதிபுரிகண்டங்காரிநெய்மைந்தா
சொல்லுகிறேன்சமூலமும்வாங்குவாங்கே. ௨௧௮

வாங்கியேநாலெட்டுபலந்தானப்பா வாகானகூவிளமுமமுக்கரவு
ம், பாங்கிடவும்பேய்ப்புடலுமாடாதோடை பாங்கானசங்குசிறுவ
ழுதலையோடாறும், தாங்கியேநிறுத்திநீயிடித்துக்கொண்டு தண்ணீர்
தூணெண்குறுணை தன்னிலிட்டு, நீங்கிடாதெரியிட்டுவெட்டொன்றா
க்கி நெய்படிநாலதிலிட்டுநெறிப்பின்கேளே. ௨௧௯

நெரிவெள்ளைப்பூசனிக்காய்த்தண்ணீர்தானும் நெய்க்குநேர்பால்நே
ராய்க்கலந்துகொண்டு, தறித்தான்றிப்பத்தியுமிளகுசெவ்வியஞ் சம

ஞகமும்மூன்றுகழஞ்சுதூக்கு, திரிபலைவிளங்கப்பத்திரிபட்டை திப்பிலியுமிலாமிச்சஞ்சிறுநாகப்பூ, பரமாஞ்சில்கர்க்கடகச்சிங்கியிவை யெல்லாம் வகையொன்றுக்கிரண்டுகழஞ்சுதூக்கே. ௨௰

தூக்கியேயாவின்பாலிலாட்டிவாங்கிச் சேர்வறவேகலக்கியேபெட் பில்வைத்து, போக்கியேகணேசன்வைத்துத்திபதூபம் புட்பத்தாலர் ச்சனைசெய்நைவேத்தியஞ்செய்து, தாக்கியேசொர்ணபுஷ்பஞ்சாத்தி யங்கே தணல்மூட்டிப்பதமாகவைத்துக்கொண்டு, தேக்கியேதிப்பிலி யும்பேரிச்சம்பழமும் சேடாமும்மூன்றுகழஞ்சுதானே. ௨௰௧

கியாழவகை.

சேர்த்ததனைத்தினமூன்றுகழஞ்சிநெய்தான் நின்றிடவேயுளமா ந்தைசுவாசகாசம், பார்த்தவுடன்கொன்றுவிடுஞ்சுணங்குமாந்தைசுபரி வானசையுறுசலத்தானுமிக்க, மாற்றமுறுஞ்சலேந்திரனுமாறிப்போ கு மைந்தனேராத்திரிக்குக்கியாழஞ்சொல்வேன், போர்த்தபுகழ்பொ ற்கடுக்காய்கண்டங்காலி புகழ்நெல்லிசிறுதேக்குமிளகுநேரே. ௨௰௨

நோகக்கழஞ்சிரண்டுசட்டிக்குள்ளிட்டு நீர்படிதானரண்டுவிட்டு வுழக்காய்க்காச்சி, வாரமுடனுண்டிடவேசயநோயிடு வறட்சியொடு பீனிசமுமாரணமுமாகும், போராகவின்னமொருகியாழங்கேளு பெரு ந்திராய்சுழலாவாரையின்மூலம்,சோய்கிறுதேக்குசுக்குநல்ல திப்பி லியுஞ்சிறப்புடனேவகையொன்றுகழஞ்சுமூன்றே. ௨௰௩

மூன்றுகத்தூக்கியப்பாநொறுக்கிவாங்கி மூதிவேரண்டுபடிசலந் திவிட்டு,ஊன்றியேயெரித்துவுழக்காய்க்காய்ச்சி யுண்டிடவேதான் விட்டுவுறவுசெய்து, தான்றியேயின்னமொருகியாழஞ்சொல்வோந் தனிசுக்குப்பொன்முசுட்டைவேரிஞேடே, தான்றியேசிறுதேக்கு தேவதாரந் தூதுவளைபெருங்குரும்பைசிந்திகாவே. ௨௰௪

காணப்பாவழுதலைவேர்கண்டங்காரி கழஞ்சிரண்டாவ்வொன் றுகியாழமுன்போல், தோணப்பாதிப்பாதிப்பிலிமேற்பொடியதாகத் தான்தூவியேசுகமாககொள்ளச்சொல்லு, நீணப்பாபத்தியந்தானெய் யும்பாலுநோதுவரையண்டமுமாமவரைப்பிஞ்சாம், பூணப்பாபீர்க்கி லாம்புடோலுமாகும் புகழானமுருங்கைமுதல்முசலாம்பாரே. ௨௰௫

முயலாகுங்கவுதாரியுள்ளானுகு முதுவரால்நெய்மீனும்சுறாமீனு கும், புயலானகொடுப்பையுமுப்புமாகும் புகழாதுநீரோய்க்கெல்லாம்

பூட்டுநன்றாய், மெபலாகும்வாகடங்கள்பார்க்கவேண்டா மாந்தைவகை
விபரத்தைவகையாய்க்கேளு, அயல்காணுமுயலொன்றுபிடித்துவந்து
அப்பனேகால்தலையுங்கூடனுப் போக்கே. ௨௨௬

மாந்தவலிக்குச்சிநெய் மாந்தவலிவகை தொண்ணூற்றாறுக்கும்.

சூடல்போக்கிநாலுபத்துப்பலந்தான்றாக்கிக் குமுறவேயிடித்
தொருபாண்டத்திட்டு, அடலுடனாறுகுறுணிச்சலமும்விட்டு அப்
பனேநாலொன்றாய்க்குறுக்கியும், விடமுயர்தோடைச்சாறுகுறுணி
விட்டு வெள்ளாவின்பாலுறுமிநாழிவிட்டு, நலைறுநெய்யங்கேயிருநா
ழிவிட்டு நாட்டிடவேமேல்மருந்தைச்சொல்லுகிறேனே. ௨௨௭

சொல்லுகிறேன்திப்பிலியுமதனின்மூலஞ் சுக்குடனேசடசின்
கிசித்திரமூலம், செல்லுமாஞ்சிறுதேக்குகுருசாளியோமஞ் செவ்வி
யமிருசிரகமுங்கிரும்புகாணும், வெல்லுமேசடாமாஞ்சில்கடுகுரோக
ணிமிளகு கோட்டமிர்தப்புவாலுமுளையரிசி, அல்லுறவேமூந்திரி
கையேல மிலவங்கமதிவிடையமாத்தையத்திதிப்பிலியுந்தூக்கே. ()

தூக்கடாகழஞ்சிரண்டுபொகிலாட்டுசொல்லுவேன்பெருவாலிபெ
ருங்குமிழுமுன்னை, ஆக்கமுறுபாதிரியுங்கண்டங்காரி யப்பனேசித்தா
மல்லிபோமல்லி, தேக்கடாகூவிளமுநெருஞ்சிதானுஞ் சிறுவழுதலை
பினைவள்முதல்சமூலங்கூட, தாக்கடாதுதுவளையமுக்கருவேர் சங்கம்
வேர்திப்பிலியுமிளகும்பாரே. ௨௨௯

பாரப்பாபயஞ்சுள்தேவதாரம் பருவாத்தைவகைச்சங்கேபலந்
தான்மூன்று, சேரப்பாநாளாக்கிநாணிநீரிற் றியிட்டுநாலொன்றாய்க்
குறுக்கிவாங்கி, ஆரப்பாயிவையெல்லாமொன்றாய்ச்சேர்த்து அடுப்பே
ற்றிப்பூசைசெய்துவலைமூட்டி, போப்பாமூன்றுநாளுறவைத்துப்
புசமாகநாலாநாள்வடித்திடாயே. ௨௩௰

கதலிக்கந்தகிருதம்.

வடித்ததைத்தநெய்யிலேகழஞ்சிதூக்கி மைந்தனேயனைக்கழஞ்
சுதேனும்விட்டு, படித்தராமாய்த்திப்பிலி தான்மேற்பொடியுந்தூவிப்
பாங்காகவுடம்பதிந்துவிருநோமூன்று, நொடிக்குமுன்நோய்களாறும்
வச்சிரதேகம் நாலுக்குமாந்தொண்ணூற்றாற்சயமுந்தீரும், கடித்தவாய்
துடைத்தாப்போல்பிணிவிண்ணேகும் கதலிக்கந்தக்கிருதங்கள்கழல்
கிறேனே. ௨௩௧

கதலிக்கந்தக்கிருதங்கேள்பெருப்பாட்டுக்கு காசங்கள்சயரோக
மெல்லாந்தீரும், கதலிக்கந்தமூலம்பூவிரண்டுநேராய் சுணக்கவொரு

லாயிடித்துப்பதக்குநீரில், கதலிக்கந்தம்நாலொன்றாய்க்குறுக்கக்காய்ச்சி கலந்ததற்குள்பசுவினெய்படிதானென்று, கதலிக்கந்தமாவின்பால்படிதானென்று கருப்புநீர்நெல்லிக்காய்சாறுந்தானே. ௨௬௨

தானென்றநிலப்பனைவேர் தண்ணீர்விட்டான்றண்ணீர் நான்வகை நால்படிதானுறு, கானென்றுகலந்துவைத்துக்கடைமருந்தைக்கேளு கழற்சிலவிலவங்கம்நேர்வாளசெந்து, மானென்றசடாமாஞ்சி திரியால் விழுது மைந்தனேயல்லியுடன் செங்கழுநீர்க்கிழங்கும், தேனென்ற நெய்தலொடுகழஞ்சுமூன்று திறமாகஅட்டியதைநெய்யிற்சேரே. ()

நெய்யையடுப்பேற்றியேயனல்மூட்டி நேராகநாலுதினந்தனை கொதிப்பாய்வைத்து, மெய்யாகவைத்தானாள்சிவக்கக்காய்ச்சி மென்மையுடன்மூன்றுநாளேறவைத்து, எய்யாமலிருநாழிகைதான்கேளு வெண்மகனேயிருகழஞ்சுவியல்பாய்த்தாக்கு, அய்யாகேள்கொண்டிடவேயொழியுங்கோர்வை யறைகிறேனுள்ளபடியறைகிறேனே. ௨௬௪

பெரும்பாட்டுக்கு நிலப்பனைநெய்.

அறைகிறேனெனும்புருக்கிமேகவெட்டை யடர்ந்தொழுகும்பெரும்பாடுமேகநீரிழி, நிறைநிற்கும்பெருப்பாட்டுக்கின்னஞ்சொல்வோம் நெய்யடாநிலப்பனைவேரொதியம்பட்டை, மறையாதக்கருங்காலிப்பட்டைதானும் வாய்க்கடங்காக்சநாவற்பட்டைதானும், குறையாமல்வகைநாலுபலமுநூறு குருகவிடித்திருநாழிநீரிலாட்டே. ௨௬௫

ஊட்டியேபெட்டொன்றாய்க்காய்ச்சிவைத்து உறவாகவிருநாழி பசுவினெய்யை, நீட்டியேயிருநாழிப்பாலுவார்ந்து நிலைகட்புளியாரைச்சாறவ்வண்ணம், நாட்டியேநீவள்ளிக்கிழங்குசாறு நயமாகவிருநாழிகூடவிட்டு, விட்டுவாய்பொன்முசுட்டைசிறுகாஞ்சொறி விளாம்பழமுந்திரிபலையுங்கொத்தமல்லியாமே. ௨௬௬

கொத்தமல்லியாங்கொட்டைபேரீச்சம்பழமுங் கோரைமுந்திரிகைபெருங்குமிழின்பழமும், வித்தமல்லியரத்தைசுக்குவெட்டிமலர்த்தாது மென்னிலவம்பிசின்கொத்தான்காட்டாத்திப்பூவும், மருதமல்லிக்கிழ்க்காயுமொதியம்பட்டை. மாதளம்பழத்தோலிலைப்பிஞ்சுதானும், சுத்தமல்லியதிமதுரம்விளாமரத்தின்பிசினுந் துய்யவெள்ளிலோத்திரமுத்தக்காசே. ௨௬௭

முத்தக்காசஞ்சனச்சாத்திரபேதி மூலமாமுக்குறுகண்ணாரிகல்நார், பத்தக்காலாமிச்சமத்திதிப்பிலி மைந்தனேசிறுநாகப்பூவியனிலைத்தோடு, உத்தக்காயிலவங்கப்பட்டைபத்திரி யோதுபஞ்சமூலக்குறுந்துங்கிலியமேலம், சுத்தக்காவகையொன்றுகழஞ்சிரண்டு சூட்டிநீவாட்டுவாயாவின்பாலே. ௨௬௮

தேன்படிதானிரண்டுவிட்டு,பூணைப்பாதானியபுடந்திங்களொன்று புத
ட்டிவைத்துப்பின்னருந்தப்போம்நோய்கேளு, வீணப்பாசயரோகந்
சுவாசகாசம் விருணபிவிகையுமரோசிபோமே. உ௪௫

அரோசிபோஞ்சுரம்போகுங்குன்மம்போகு மப்பனேயஉருஷே
யிரத்தபித்தம்,அரோசிதருமெலும்புருக்கிவெப்புப்பாவை யமேனகமா
ம்ரோசஞ்சூருந்திரும், அரோசியறுமட்டசந்தவிபாங்கேளு அிற்க
ட்டையலர்க்காயிலவங்கப்பட்டை, அரோசிபோங்கோஷ்டமுடன்க
ஸ்தூரிமஞ்ரள் அப்பனேகுங்குமப்பூகர்ப்பூரந்தானே. உ௪௬

நீர்வள்ளிநெய்.

கர்ப்பூரஞ்சமுத்திரபச்சையோடு காணப்பாவட்டசந்தங்கருதிப்
பாரு, கர்ப்பூரநீர்வள்ளிநெய்யைக்கேளு கருதியதின்கிழங்குச்சாற்ப
டிதானுநு, கர்ப்பூரவாவின்பால்படியுநாலு கட்டதற்குள்ளிருநாழிநெ
ய்யையேயும், கர்ப்பூரநற்பாலேவெரிஞ்சேட காணாத்திமாகாளிக்கிழங்
குமவாங்கே. உ௪எ

கிழங்கப்பாநன்னாரியிருவேலிவேருங் கேளடாமூசுமூசக்கைவே
ருங்கூட, களங்கமில்லாவிலுப்பைப்பூபூமிசர்க்கரையும் கருடமதூரஞ்சந்
தனமும்பேரீச்சம்பழமும், குழங்கவேபற்பாடகய்யாவாயப்பட்டை
மூந்திரிகைசிந்தியுடனத்திப்பட்டை, விளங்கவேநாவினிடவிழுதுங்
கூட வெள்ளீச்சங்கொழுந்துடனேவிபரங்கேளே. உ௪அ

விபரங்கேள்வகையொன்றுமிருமற்பாலில் மிக்கவேநானுசாமம்
யாட்டிவாங்கி, விபரமாய்நெய்யுடனேகலந்துவைத்து மெதுவாகத்தி
யெரிப்பாய்திரைந்தான்மூன்று, விபரமாய்நாலாநாள்வடித்துக்கொண்
டு மேன்மைபொடிதேனுக்குச்சமனாய்ச்சேர்த்து, விபரமாசர்க்கரையும்
பலந்தானாறு மிருமத்திப்பிலியும்பலந்தானென்றே. உ௪௯

கிறுச்சினம் ஆறுக்கும்இளநீர்.

ஒன்றாசப்பொடித்துநெய்யிற்போட்டு வுண்டுவாக்கழுத்தான்
றுகாலத்தாலே, நின்றாயும்பெருப்பாடுகெட்டிச்சோனை நிலையாதவெ
லும்புருக்கிச்சயமுமீளை, யொன்றாகக்காலெரிவுமூர்ச்சைதாகம் பொன்
றிவிடும்பஞ்சதனிற்புறப்பட்டாப்போல், குன்றாதவிள்நீர் நெய்கிரிச்
சினங்களாறுங் கூட்டோடேதிறந்திடவுங்கூறினேனே. உ௫0

திறந்துவிடுமிளநீர்தான்படிதானுநு செப்புகிறேன்பூசணிக்காய்
தண்ணீர்நாலு, திறந்தவருவாழையுடக்கிழங்கின்சாறு மெ௱ரிதண்

ணீர்மிட்டான்றன்கிழங்கின்சாறு,மறந்திடாதொவ்வொன்றுபடி-தானா
லு மைந்தனையாவின்பால்படியுநாலு, கறந்துவிடுகருப்பஞ்சாற்பொ
ன்னாங்காணி களங்கமதுநீர்முள்ளிச்சாறும்வாங்கே. ௨௫௧

வாங்கடாயிச்சாறுபடிதானிரண்டு வகையானசிந்திபுடகியாழங்
கேளு, பாங்காகநாலுபடிநெருஞ்சிச்சாறு பார்புகழுமோரிலைத்தாமரை
யின்சாறு,நீங்காமலெண்ணென்குபடியுமொன்றாய் நீபெரியபாண்டத்
தில்விட்டுப்பின்பு, ஆங்கமுறுமாநெய்யும்படியிரண்டு வைப்பனைசலா
சத்துகல்நார்காணே. ௨௫௨

கல்நாருங்கல்மதமுஞ்சிறுபூளை வேருங்கருவத்திதிப்பிலியும்பொ
ன்னாங்காணி,செந்நாயுருவிவேர்கூகைநீருஞ் சிறுமுள்ளிபின்விரையு
மேலமெள்ளு, மன்னுகுந்தேத்தின்விதைபொன்மத்தம்வித்து மைந்
தனைவகையொன்றுவராகன்மூன்று, மின்னார்தன்பாலிலேயாட்டுவா
ங்கி விரவியேயடுப்பேற்றிவடித்துக்கொள்ளே. ௨௫௩

வடிக்குமுன்னேயாவின்பால்படிதானாலு மாட்டியேநிறுத்ததனை
நீர்வாங்கிவைத்து, குடித்திடவேசீனியதிற்படிதானொன்று கொள்ளி
யேதேன்படியுமுக்கால்சேர்த்து, முடித்திருக்குநோய்க்கெல்லாஞ்கழ
ஞ்சுமூன்று கொண்டுண்ணக்கிரிச்சனங்கள்சுக்கிலமேகம், கடித்திருக்
குங்காலெரிவுதாகமூஷ்ணங் காட்டகத்தில்வீழ்தீப்போற்கரிந்துபோ
மே. ௨௫௪

கூழ்பாண்டக்கிருதம்.

போகாதசயமுதலாய்மேகமெல்லாம் போவதற்குபூசனிக்காய்
நெய்யைக்கேளு, வாகானபூசனிக்காய்ச்சாறுபடியெட்டு மைந்தனை
நீர்வள்ளிக்கிழங்கின்சாறு, பாகாகப்படியெட்டுகருப்பஞ்சாறு மடியா
னரண்டுபால்பகவினெய்கேள், ஆகமுடன்படியானரண்டுதேன்பொ [illegible]
று யளந்துவிடுபாண்டத்திலறையக்கேளே. ௨௫௫

அறைகிறேன்நிலவங்கமேலமிந்து வப்பனைவிழா [illegible]
கம், நிறைகிறேன்சாதிக்காய்சீரகமுங்கேளு கோரணசதகுப்பை [illegible]
நீறு, மறையாதமுந்திரிகைபேரீச்சம்பழமும் மகத்தானகோட்ட [illegible]
தூரந்தானும், நிறைப்பாகத்தூக்கியேபாலிலாட்டி நெய்யிலிடுபேய்வா
ழைப்பழந்தான்பத்தே. ௨௫௬

பழம்போட்டுவடித்தடீனை நடைந்துகொண்டு பாய்ச்சுவாயதி இழக்கப்பண்கதானை, கனக்கயின் நிப்பராபரனைநினைந்துகொண்டு க டிந்திரண்டுவிருநேரமுண்டபோது, உமைமாத்தைசுரமாத்தைதெந்நெ றை உத்தமனேமேகத்திற்கிரிச்சனங்களாறு, முனம்போட்டுமூத் திரப்பாளைத்த முற்றுமின்றாத்தகாசமெல்லாம்போமே. ௨௫௭

## வெள்ளுள்ளிக்கிருதம்.

போவதற்குக்குடல்வாதம்சூலைவாதம் பொன்றிவிழவெள்ளுள் ளிநெய்யைக்கேளு, போனதற்குத்தலாமொன்றுவெள்ளுள்ளிப்பரு ப்பு புகழாகவிடித்ததனைப்பண்டத்திட்டு, போவதற்குள்பதினறுமா க்கால்தண்ணீர் புகட்டிநீமூன்றுறவிபாகவாங்கி, போவதற்குவளைவி ஷரம்படிதான்முட்டி பூட்டுதற்குவரைதேன்புகழ்ந்துகேளே. ௨௫௮

கேளப்பாபெருக்குறும்பைவில்வப்பாதிரி கிரிகைபுறப்பெருங்கு மிழுமிவைநோக, ஏளப்பாபமைறைதாலேவைவொன்றாகூட்ட மிடித் துமேநாற்குறுணிசலத்திலிட்டு, நீளப்பாரண்டுபடிநெடுநாளேக்காடிநீர் விட்டுநேர்மாதுளம்பழச்சாற்நாலு, தாளப்பாரண்டுபடிதிறமாய்ச் சேர்த்து சாரப்பாதிரிகடுகுதிப்பிலியுங்காணே. ௨௫௯

காணப்பாவோமமிந்துவிருசீரகமும் கடையில்வாழ்செவ்வியமுந் தேவதாரம், பூணவேபுளிகடலைகாளைமூலம் பொருந்துசீவகைக்கன் னைகழுந்தநாலு, தோணவேவெள்ளாட்டுப்பாலிலாட்டி துகையாகரா ண்டுபடிநெய்யுந்சேர்த்து, ஊணவேவடித்திறுத்துக்கழஞ்சிரண்டு உ ண்டிடவுங்குடல்வாதமாறும்போச்சே. ௨௬௰

## வல்லாரைநெய்.

போச்சென்றநோயாதவாதங்காசம் புனைத்தெழுப்புர்வட்டைமூ தற்குடசோமம், மாச்சென்றதாகூலையஸ்திவைப்பும் படருகின்றபா ண்டுபீலிகையும்போக, வாச்சென்றவல்லாரைநெய்யைச்சொல்ல மைம ந்தனேயருந்திடவோராசைகேளு, நீச்சென்றவல்லாரைப்பசுவின்பா லும் நேரானசீதேவிசெங்கழுநீர்ச்சாறே. ௨௬௧

சாறுபடிமூன்றுன்குவிளநீர்த்தண்ணீர் தானிரண்டுபடிநெய்யை யைங்கால்கூட்டி, மீறமற்குன்றிவேர்செங்கழுநீர்மூல மேலானமதுர ங்கோரோசினைதான்கூட்டம், கூறுனவத்திபிலேப்பச்சைகற்பூரம்குறை

யாமத்கழஞ்சொன்றுபாலிலாட்டி, ஆறுமற்கொதிப்பிட்டுமூன்றுநாள்
தான் அப்பனேநாலநாள்வடித்தாக்கொள்ளே. உசஉ

சொள்வேகாசிடைதான்விஷங்கடீரும் கூருணாபிகஞ்சு மூதை
நஞ்சு,விள்ளவேபாலியெட்டிநஞ்சுதீரும் மேல்வற்றுக்கால்வற்றுக்கா
ந்தல்நீரும், துள்ளுமேயஸ்திதாரமெலும்புருக்கு சூன்யமூர்வயிற்றெ
ரிவுவாயிலெச்சில், அள்ளவேகுறைந்தாற்போலுடனேதீருமனேகசுக
முண்டாகுமப்பாபாரே. உசங

புளியாரைநெய்.

பாரப்பாபுளியாரைநெய்யைச்சொல்வேன்படரானகிராணிவகை
யாறும்போக,நேரப்பாபுளியாரைக்குறுணிச்சாறுநெய்தானுமிரண்டுப
டியாகஞாழி,பேரப்பா திரிகடுகிந்துபெருங்காயம்பேரானவெவாச்சார
ம்சாதிக்காயும், காரப்பாவெட்பாலைதிப்பிலியுமூலம்கிராம்புமாதுளம்பூ
வுமஞ்சள்காணே. உசச

பலாதிநெய்.

தாணவேயிலவங்கமிவைகளெல்லாம்கழஞ்சியங்கேவகைக்காறுதூ
க்கியாட்டி, ஊணவேகாய்ச்சிநீகொடுக்கும்போது வுத்தமனேயாறுவ
கைக்கிராணிதீரும்,மாணவேபலாதிநெய்யைச்செப்பக்கேளுவடிப்பட்
டைபலாசும்பால்நாலெட்டாகும், தோணவேகலந்தாக்கியிடித்துமை
ந்தாசொல்லுகிறேனிருகுறுணிநீரிலூட்டே. உசரு

தயிர்நெய்.

ஊட்டியேபடியொன்றாய்க்குறுக்கிவாங்கியுறவைப்பாயிலேத்தண்
கெழஞ்சிதானும், ஆட்டவேபடிநெய்யையதனிற்சேர்த்துவணலிவிட்
டுப்பதமாகவடித்துநீயும், மூட்டவேகிராணிகுன்மம்கழிச்சல்விக்கல்மு
றையெல்லாங்குறைதீருமோசமில்லை, நாட்டவேதயிர்நெய்யைமைந்
தாகேளுநலமானதயிர்குறுணிநெய்நாழிதானே. உசசா

தானென்றபெருங்காயமோமத்தோடும் சாற்றுவாய்திப்பிலியுங்
கடுக்காய்கூட,மானென்றவட்டதிருப்பிகருஞ்சீரகமும்மைந்தனேபுங்க
ம்வேர்வகைக்கோர்பத்து,தேனென்றவேர்கொம்புமூப்பதாகும்சே
வைகழஞ்சுநீர்தாக்கியாட்டி, கானென்றவென்குறுணிநீரில்விட்டுக்காய்ச்
சியேநாலொன்றாய்நெய்யிற்சேரே. உசஎ

நெய்யிற்சேர்திப்பிலியின்மூலந்தானும் நேரானசாட்டுதிப்பிலியு
ங்கூட, உப்பவிருசீரகமுமத்திதிப்பிலியும்முற்பணஞ்சேர்வில்வக்காய்
வட்டத்திருப்பி, அப்பமில்லாமாமஞ்சள்வெட்பாலைபரிசிபதிமதுரம

மரத்தையிலைவாகனறுசேர்த்து, கைபோடேவடித்திறுத்துவருந்தா
ம்போது கிராணிகுன்மமதிசாரஞ்சூலைபோமே. ௨௬௮

## சுக்குநெய்.

சூலைபோஞ்சுக்குநெய்யைச்சுட்டக்கேளு சுக்குநீயிரண்டுபலத்து
பலமுந்தாக்கி, சிலமுறுமாயிலுடபட்டை, தன்னைச்சேராசுக்குக்குச்
சமனுயப்பா, சாலநீயிடித்தனைமுக்குறுணிநீரிற் றாக்கியேநாலொன்றா
ய்க்குறுக்கிவாங்கி, பாலுறையுந்தயிர்தண்ணீர்படிதான்ரண்டுபண்பான
நெய்யதற்குள்ளண்டனைதானூற்றே. ௨௬௯

ஊற்றிடுவாய்பெருங்காயந்திரிகடுகுசெவ்வியமோமத்தி திப்பிலி
யுங்கொடிவேலிவேரும், ஊற்றிடவேதிப்பிலியின்மூலந்தானுமோராங்
வளரெவச்சார மொவ்வொன்றைக்கேள், ஊற்றிடவேகழஞ்சிரண்டு
சேர்த்துக்காய்ச்சி யொருநேரமுக்கழஞ்சுண்டபோது, ஊற்றிருந்த
வதிசாரம்பாண்டுசோகை யோடிப்போமண்டலந்தானுண்ணச்சொல்
லே. ௨௭௰

## பொன்முசுட்டைநெய்.

உண்ணையிலேமுருங்குவலிவயிற்றுநோய்வுடல்நோய்வுகாந்த
லிலைவயுடனேநிற்கும், உண்ணவேபொன்முசுட்டைநெய்யைக்கேளு
உண்ணவேபொன்முசுட்டைசித்திரமூல,மோங்கின்ற மாதளவேர்
த்தொலிகடானும், உண்ணவேமாதளந்தோடதிவிடையங்கோஷ்டமு
ற்பனஞ்சேர்த்திப்பிலியுமூலங்காணே. ௨௭௧

மூலமுடன்சுக்குதிப்பிலியுமஞ்சளுறுதேவதாரமரமஞ்சள்தானு
ம், ஆலமுறும்வாலுழுவைபிலந்தைபட்டை யப்பனேவெட்பாலைவசம்
பரத்தை, ஏலமுடன்கிற்றேலங்கடுகுரோணியிலைவாசப்பட்டையுட
ன்பத்திரியுமோமம், பாலிதற்குரண்டுபடிநெய்யுநாழிபாய்ச்சிநீவடித்
திறுத்துப்பாணிசேரே. ௨௭௨

## பஞ்சகௌவியக்கிருதம்.

சேர்த்தங்கேபாலருக்குக்கிராணிமாந்தஞ்செப்பரியசுனையிரளிகா
மாலைசோகை, பார்த்தங்கேமனமுனைத்துக்கொடுக்கத்தீரும் பஞ்ச
கௌவியநெய்யைப்பகரக்கேளு, வார்த்தங்கேபால்தயிர்நெய்கோமய
மூநீருமைந்தனைபிழிந்துகொண்டுமார்க்கங்கேளு, ஊர்த்தப்பாவைந்
துவகைநீருங்கேளுஒருபத்துப்படியாகவளந்துகொள்ளே. ௨௭௩

அளந்ததற்குக்கர்க்கவகைசொல்லக்கேளு அதிமதுரஞ்சிறுதேக்கு
கோட்டமிந்து, விளந்தணியும்வாய்விளங்கங்கொத்தமல்லிவிழாவரிசி
வாலுழுவைவெட்பாலையரிசி, வளந்தருநல்லசப்புள்ளிதேவதார மகத்
தானசதகுப்பைபரத்தைசெந்தம், உளங்குகருஞ்சீரகமும்பூலாப்பட்
டையுற்றபூலாவிருட்சமாப்பொடிநன்றாரி. ௨௭௪

நன்னாரிபொன்முசுட்டைநெல்லிவேரும் நலமானசாரணைவேர்கீழ்க்காய்நெல்லி, பொன்னாகுநிலப்பனையுந்துத்திவேரும்புகழ்கடுகுரோகணியும்பெருங்குரும்பை, மின்னாகுமதிவிடையஞ்சாதிக்காய்காந்தமிக்கடத்திரிதிரிகடுகுவில்வவேர்சாப்பல், மூன்றையதிரிபலையுங்கழஞ்சாய்த்தூக்கி முக்கியமாய்வரைத்தந்தநெய்யிற்சேரே. ௨௭௫

அரைத்திட்டமருந்தோடேமூன்றுநாள்தானடுப்பேற்றிக்கொதிப்பிட்டுநாலாநாள்தான், விரைந்தாகீழிறக்கேதநான்றினந்தானெட்டுவிபாமுடனெற்குழியில்வைத்துப்பின்பு, வரைந்துதினங்காலையில்கழஞ்சுகொள்ளவற்றாகபெருப்பாடுகுன்மந்தீரும், கரைந்திழியும்பிணிசயமும்பித்தப்பாண்டுங்காமாலைபெருவயிறுந்தீருங்காணே. ௨௭௬

பவுத்திரத்திற்குக்குக்குல்நெய்,

காணவேசொல்லிவிந்தந்தப்பிரயோகத்தைக்கறைந்தபடியறைந்திட்டேன்களங்கமின்றி, தோணவேபிணியுள்ளோருண்டாராகில்துயர்நீருஞ்சுகமாகுந்தேகந்தானும், கோணைதக்குக்குல்நெய்தான்பஞ்சகோலங்கூறுகிறேன்திப்பிலிதிப்பிலியின்மூலம், பூணவேசெவ்வியமுஞ்சித்திரமூலம் பொன்முசுட்டைசீந்தியுடன்சுண்டைவேரே. ௨௭௭

வேரானவில்வவேராடாதோடைவேர்க்கொம்புபேய்ப்புடலுங்கண்டங்காரி, ஆரமுருங்கிப்பத்தோல்கருவேற்பட்டை ஆயிலியத்தோல்புங்கந்தோல்கொன்றைத்தோலும், சீரானமுத்தக்காசுதின்னுப்பாலைசெங்கடுக்காய்கொத்தமல்லிதேவதாரம் வாரமுறும்வசம்புமுட்காவளையின்வேரும்வகையொன்றுகழஞ்சங்கேயறுபதாமே. ௨௭௮

ஆமப்பாவகைவகையே நிறுத்துவாங்கி ஆட்டியேதூளாக்கித்தண்ணீரில், வேப்பாயெட்டொன்றாய்க்குறுக்குவாங்கிவிடுநெய்யுமோருபடியாமேல்மருந்தை, காப்பாசொல்லுகிறேன்சீனக்காரம் நாகப்பூதிரிகடுகுதேவதாரம், ஐயப்பாதிரிபலையுஞ்சவாக்காரமேலம்உசித்தசத்திசாரநறுங்கோட்டந்தானே. ௨௭௯

கோட்டமொடுவசம்புமிலவங்கப்பத்திரி கொடிவேலிவேர்ப்பட்டைதிப்பிலியின்மூலம்,வாட்டமுறுங்கரிப்பானுங்கடுகுரோகணி மைந்தனேசாரணையுந்தேவதாரம், மூட்டவேயதிவிடையம்பொன்முசுட்டைவேருமுத்தமனேவெண்கடுகுகடுக்காய்பாஞ்சில், ஆட்டமிடும்பெருங்குரும்பையத்திதிப்பிலியழகானபெருங்காயமோமம்பாரே. ௨௮௦

ஓமமொடிந்துப்புவளையலுப்புவுறக்காய்ச்சலவணமொடுபொட்டிலுப்பு, ஆமமொடுகல்லுப்புபெருமரத்தின்பட்டைபடவானவுவர்வேருர்வாரகமென்று, சோமமுறுஞ்சுத்திசெய்தகுக்கிலப்பா தூக்கடா

ளைந்துபலந்துளாயாட்டி, வமருருமருந்தெல்லாமொன்றாய்ச்சேர்த்துஎன்மகனேயாவின்பாலாட்டிடாயே. உ௮௧

குக்கில்நெய்.

ஆட்டியந்தநெய்தனிலேகலந்துகொண்டுஐந்துநாள் சொதிப்பிட்டுவாருநாளில், மூட்டியேவடித்திறுத்துப்பக்கமொன்றுமுன்போலநெய்க்குழியில்வைத்தெடுத்து, ஊட்டுவாய்வராகனெடைவாரயாறு உண்டிடவேபவுத்திரமும்பிளவைசூலை, நாட்டியதோட்டகுன்மம்விப்புருதிவருத்தம்நாவிற்புண்மூலக்குத்துநாசமாமே. உ௮௨

நாசமப்பாபலபுண்ணும்யோனிச்சூலைநலங்கெடுக்கும்பலவிரணங்கண்டமாலை, நேசமாய்த்தனிக்குக்கில்நெய்யைச்சொல்லநீகேளு பலத்தியனேநினைவுகொண்டு, வாசமுறும்வேப்பந்தோல்கண்டங்காரியைந்தனேபேய்ப்புடலுமாடாதோடை, நேசமெனுஞ்சிந்திசிறுவழுதலையின்வேரும்நிறையாகப்பத்துப்பலந்தானிட்டே. உ௮௩

ஆட்டியேயெண்குறுணிநீரிற்சேர்த்துஅக்கினியில்மாட்டிபதைக்குறுணியாக்கி, ஊட்டுவாய்நெய்யங்கேயறுகாலப்பாவுறச்சேருபொன்முசட்டைவாய்விளங்கம், தீட்டியதோர்செவ்வியமுந்தேவதாரந்திப்பிலியுமெவாச்சாரஞ்சத்தியட்சாரம், சூட்டுவாயேலமஞ்சள்வீழிவேர்த்தோல்சுகமானவெட்பாலைமிளகுதானே. உ௮௪

மிளகோயங்கொடிவேலிகடுகுரோணிமூசமாயஞ்சிட்டியதிவிடையமாஞ்சில், இளகாகக்கடுக்காயும்வசம்புநல்லவியல்பானசிரகமுமிடைதான்சேரு, வளமாகக்காசெடைதானிரண்டுதூக்கி மைந்தனேகுக்கிலப்பாபலமுமொன்று, களவாகத்தனித்தண்ணீர்விட்டுஆட்டிகாய்ச்சடாவாருநாள்வடித்துக்கொள்ளே. உ௮௫

வடித்ததொருநெய்யிலேவாகன்றாக்கிவாருவுகண்டிடவேவைங்காகேளு, குடிக்குமுன்னேநசியமிடுவுடம்பிற்பூசுகொடுங்கன்பாசபவுத்திரங்கள்வீக்கம்போகும், கடித்திருவிற்புருதிகண்டமாலைக்காணிமுதற்சழல்வாதம்பேய்முசட்டை, துடித்துவிழும்பிணிசமுக்குலையின்சுகமாகும்ஆருப்புண்வாந்திபோமே. உ௮௬

புடோல்நெய்.

வாந்திபோம்புடோல்நெய்யைமைந்தாகேளுவாங்கடாசமூலமுந்தான்பேய்ப்புடோலை, காந்திதரும்வேப்பந்தோலாயில்பட்டைகருவேம்புநாவல்நன்னாரிவேரும், சாந்தியாமத்தியாலசித்திதயவான திப்பிலிமுகிழிகந்தைப்பட்டைவேம்பு, ஆந்தியாங்கரிப்பாலை வாகைமூலமுமதுராமுத்தக்காசன்பாய்க்கேளே. உ௮௭

சினுள்ளேகட்டுப்போக்கும், ஆலமுறுமானந்தவாிரவனைச்சேர்த்து அப்படியேமண்டலந்தானருந்திஞக்கால், வாலைசிவகனுகும்வச்சிரதேகம் வசிகாஞ்சேர்நாயுருவிநெய்யைக்கேளே. உ௬௯

நாயுருவிச்சிவந்ததாய்ச்சமூலம்வாங்கி நறுக்கடாதலாபொன்று நிறுத்துநீயும், நேயமூன்றாளாக்கியெண்குறுணிநீரில் நிலைக்கவேயவித்துப்பின்னெட்டொன்றாக்கி, ஆயமுடனுவினெய்தானறுகால்விட்டு அதற்குவகைகொடிவேலிவேரின்பட்டை, மாயமறுஞ்சுருஞ்குரை வேர்வெட்டிமுன்னை பைந்தனேமுசுட்டைவேர்சிவதைவேரே. ()

## மூலமாறுக்குங்கியாழம்.

சிவதைதிரிகடுகிந்துதிரிபலைநேர்வாளஞ்சேங்கொட்டைதான்றியுமரப்பட்டைதானும், சிவதையெனுமாயிலுடன்புங்கம்பட்டை சிறமானசொல்லிடல்விகூடவேதான், சிவதையெனுங்கஸ்தூரியஞ்சுள்நாணுஞ் சிறுபிரண்டைக்கிழங்குநடேன்காட்டுச்சேனை, சிவதையெனுமாக்கிழங்குஇவைகளெல்லாஞ் சேராவகையொன்றுகழஞ்சுமூன்றே.

மூன்றாகத்தாக்கியேபாலினாட்டி மூலாவிடுஆவின்பால்படியும்நாலு, மூன்றொன்றுநான்குநாள்கொதிக்கவைத்து முறையேபாடேயைந்தாநாள்வடித்துவாங்கி, மூன்றுகுங்கழஞ்சுநெய்யைக்காலைத்திலுண்ணை மூலமுகிழ்மூலாத்தமூலமாறும், மூன்றுகுந்தாதுவிலேபிறந்தமூல மூனைசெறியுபாறுவகைமூலம்போமே. உ௭௭

மூலமென்றவுள்மூலமிரத்தமூலம் முழங்கியேசலவிமுகுமூட்டைசக்செல்லாம்,சாலவேகுடிநீரைச்சாற்றக்கேளு சன்னஇலவங்கமொடுஇலாமிச்சம்வேர், சீலமுடனேங்கழஞ்சுஇடித்துநீயுஞ் சிலையங்கேபடியொன்றுஆழாக்காக்கி, காலமேகொண்டுவரத்தினந்தானஞ்சு காணுதுமூனைகளையுங்களிமபுகேளே. உ௭௮

## மூலமூனைகளையக்களிப்பு.

களிம்பேதுமுசிழ்மஞ்சள்கள்ளிப்பாலால் கனாயவேபயனப்போலாட்டிவாங்கி, களிப்பதனைப்பூசிடவுங்கரைந்துபோகுங் கள்ளியிலையெருக்கிலையுபாவிலிங்கிலையும், களிப்பறவுமிடித்ததனைப்புகைபிடிக்கக் கரைகிடாதின்னமொருகியாழஞ்சொல்வோம், களிம்பான்றிவேர்க்கொப்புவெட்பாலைப்பட்டை கடுக்காய்தான்மூன்றிட்டுக்கியாழம்வையே. உ௭௯

## கியாழம்

வைத்தமொருகியாழமுண்ணில்மூலம்போகு பைந்தனேயின்னமுண்டுவரிசைசொல்வோம், வைத்திடுவாய்கியாழம்மீமதுரங்கெந்தம்

மகத்தானநிலவேம்புசிறுகாஞ்சோரிமுல்லை, வைத்தங்கேயெட்டொ
ன்றாய்க்குறுக்கியூட்ட வறள்மூலமுள்மூலம்வாதைநீரும்,வைத்திடுவா
ய்வெட்பாலையரிசிபட்டைமைந்தனேகெருடபச்சைசமபாகந்தாக்கே

## மூலக்கிராணிக்குத்தாறுவாதிக்கிருதம்.

சமபாகமாகீயெடுத்துக்கொண்டு சாந்துபோல்பச்சரிசிக்கழுநீர்த
ன்னில், சமபாகமாட்டியேதேனிற்சேர்த்துத் தானுண்ணத்திருடா
இன்னம்மீகளு,சமபாகஞ்சந்தனமுஞ்செங்கழுநீர்க்கிழங்கும் தனியில
வம்பிசினுமிடைசரியாய்ச்சேர்த்து, சமபாகமேடத்திநொட்டுப்பாலில்
தாக்கவேகிராணிவகைச்சளங்கள்போமே. ௩௱௧

சளஞ்செய்யும்வருரிப்புண்ணுருப்புண்ணுஞ் சரீரத்திலுண்டா
னசார்புக்கெல்லாம், முளங்குளிரத்தாறுவாதிக்கிருதங்கேளு முறை
யேதுவெள்ளறுகுநெய்யென்பார்கள், பளந்திண்ணிப்பாலைபிடபட்
டைதானும் பாங்காகநாலெட்டுப்பலமுந்தாக்கி, விளந்தணிக்கும்வெள்
ளறுகுசாரணைநாழி விட்டிடுவாய்நெய்யதற்குளஞ்சுழக்குத்தானே. ()

நெய்விட்டுப்பட்டையைநீபிடித்துத்தானும் நீர்விடுவாயெண்ணா
ழிநேர்ப்பாய்க்காய்ச்சி, ஐபனேரண்டுபடியாக்கிக்கொண்டு அப்பனே
நெய்யுடனேயாற்றியங்கே, மெய்யிட்டவாவின்பால்படியுமொன்று
மேன்மதுரம்பாலைமுசிழிலந்தைபிலாபிச்சு, வையிட்டநன்னாரிகொம்
பாக்கு மருவுறையுங்குங்கிலியமலர்க்காய்காணே. ௩௱௩

மலர்க்காயுமுந்திரிகைச்சோமடவி மைந்தனேவெள்ளறுகுகொ
ட்டிமூலம், மலர்க்காயுமுத்தக்காய்சல்விமூலம் வரிசைபெறுமுளரியி
டனையந்தானும்,மலர்க்காயும்வகைக்கங்கேகழஞ்சமூன்று வரைந்தா
ட்டிப்புகட்டிநீமூன்றுநாள்தான்,மலர்க்காலிநாலாநாள்வடித்துவைத்து
மமேறுன்மணியைச்சதாசிவனைவணக்கஞ்செய்யே. ௩௱௪

## வயித்தியமுறை.

வணக்கடாகணபதியைச்சித்தர்முத்தர் மகத்தானரிஷிதேவர்
ஞானத்தோரை, பிணங்காமலடிபணிந்துகருவம்விட்டுப் போற்றிவே
யித்தியஞ்செய்யுநிதமெப்போதும், இணங்காதபேருடனேயிணங்கவேண்
டாம் இனமறிந்தவுண்மைசொல்லுஇல்லாவிட்டால், உணங்காதசமா
தியிலேநின்றுகொண்டு வொப்பாதவதிதியெனவொடுங்கியாடே. ()

ஒடுங்காதநெய்ப்பாகக்கழஞ்சாண்டு உண்டுவாருச்சூரியப்புண்ணு
ப்புண்ணும், ஒடுங்காதவிக்கங்கள்ரத்தபித்த முள்க்கிரந்திபிறக்கிரந்தி

ஒடிக்கன்ருலை, ஒடுங்காதசிச்சடுபுண்விசகந்துக்கம் ஓடிப்போம்நெய் கொண்டவுடனே அப்பா,ஒடுங்காதபேய்ச்சொறிக்குச்சிந்திலெண்ணெய் யுரைக்கிறேன்சேதபித்தமென்றும்பேரே. ௫௱௬

பேய்ச்சொறிக்குச்சிந்தில்நெய்.

போரானசீந்திலுடன்வேப்பம்பட்டை பேய்ப்புடலும்வகைக்குக் கேபலம்பதாக, சோகவிடித ததுகொக்குறுணிநீரில் செலுத்தியீட்டு நாலொன்றுக்கி, வாரகநெய்த்தாளிக்கின்னமைந்தா வாடாநெய்ய டிதான்மருந்துசொல்வோம், போரானபேய்ப்புடலுமிலாமிச்சம்வேரு ம் புகழ்மஞ்சள்பாருஞ்சன் அகில்நெகந்ததக்கனே. ௫௱௭

கெந்தமொடுகச்சோலந்தேவதாரம் கிளர்கோட்டஞ்செஞ்சந்தன் கிளமோலத்துடனே, அந்தந்தவகைக்கப்பாசமுத்தாண்டி ஆட்டிப்பக்கே கொதிப்பித்தாக்கினந்தான்மூன்று, பத்துமூடுரைநாள்வடித் தூவாங் கிப் பாங்காகவிருக்குமுஞ்சவுண்ணச்சொல்லு, வந்தசொறிசிரங்குப்புண் சட்டைவாங்கு மாறுதக்கருங்குட்டம்வாங்கிப்போமே. ௫௱௮

மூக்கிலும்வாயிலும்விழுகிறஇரத்தவெள்ளுடைப்புக்கு.

வாங்குடாகசிபத்தாவினைக்கண்ப மருந்ததைதான்சொல்லுகி றேன்மயககடீக்கி, பாங்கானவேப்பந்தோல்கடுகுரோணி பருந்தோ ட்டைமுந்திரிகைபேரீச்சம்பழமும், பாங்காகமுருக்கம்பூநெல்லிப்பூவு ம் பருத்திதிப்பிலியாத்தையனைத்துமைந்தா, ஈங்காமல்நயமயிடத்தி ருங்கண்டா யிரத்தவெள்ளுடைப்புக்குமியம்பக்கேளே. ௫௱௯

கேளப்பாசிற்றாமல்லிநீழ்க்காய்நெல்லிகிளர்கண்டங்கத்திரிவேர் வேப்பம்பட்டை, நாளப்பாகோட்டமுடன்கடுகுரோணி நல்முந்திரி பேரீத்துஅத்திதிப்பிலி, காளப்பாமுருக்கம்பூநெல்லிமுள்ளி ஆயவான சிறுதேக்குஇலாமிச்சம்வேர், ஆளப்பா அதிவிடையமிவையோரொன் று அப்பனேமுப்மூன்றுவிராகன்தாக்கே. ௫௱௰

பறங்கிப்புண்குட்டரோகம் குலைஇதற்குச்சடைச்சிநெய்.

ஆர்க்கென்றுபாட்டியேநாழிநெய்யில் சுவறவேகலக்கிகொன்றுய்வ டித்துக்கொண்டு, தாக்குவாய்காசெடைதானுண்ணச்சொல்லில் சாகு கத்தைககேள்மகனேசாற்றுரேம்நாம், மிக்குமேவெள்ளுடைப்புமூக் குவாயில் விழுகிறதோத்தமெல்லாம்விழொட்டாது, பாக்கியங்கள் செய்தவர்க்கேயிந்நூல்தான் புண்பாகச்சிக்குமடாபற்றிப்பாரே, ௫௱௧௧

பாரப்பாபறங்கிப்புண்குட்டஞ்சாத்தியம் பரிவானவிசம்படாதா மளைகட்கெல்லாம், சாரப்பாசடைச்சிநெய்யைச்சாற்றுரேநாம்சடைச்சியுடபட்டையங்கேதுலாமுமொன்று, சேரப்பாயெண்குறுணிசலத்துக்குள்ளேதெரித்திட்டெட்டொன்ருய்க்குறுக்கிப்பின்பு, வாரப்பாயிருநாழியாவினெய்யைமைந்தனேபடியொன்றுநிம்பநெய்யே. ௱௰௨

நிம்பநெய்யுங்சச்சந்திராய்சாறும்நாழிநீவிட்டு அதிமதூரம்பேய்ப்புடோலு, மின்பமுறும்பொற்கொன்றைமூலந்தானும்பியலானபேய்ப்பிசட்டிவெட்பாலையரிசி, அன்புபெறுமதிவிடையம்பற்படாகம் அத்திதிப்பிலிவிழாவரிசிவேப்பம்பட்டை, உம்பர்புகழ்கொடிவேலிகடுகுரோணியுற்றதோர்நிலவேம்புபெருங்குரும்பைவேரே. ௱௧௩

வேருடனேவகையொன்றுவிராகன்மூன்றாநிறைமலாட்டியங்கவெய்யிற்போடு, வாரமுடன்வடித்தாறிவைத்துக்கொண்டுமாட்டாரசகெந்திமனோசிலையிம்மூன்றும், சீருடனேமும்மூன்றுகழஞ்சிதூக்கிசிகருமற்சாமமொன்றுதுளாயாட்டி, நேருடனேநெய்யிலிட்டுஆறவைத்து நிலைவாகஆளறிந்துநீசெய்வாயே. ௱௧௪

ஆள்பிலமும்நோய்பிலமுமறிந்துகொண்டு அப்பனேமுக்கழஞ்சுயிருகழஞ்சுதானும், நாள்பெறநீயுள்ளுக்குமேலும்பூசுநலமாகமூன்றுநாளைப்பைப்பூசி, கோள்படனேகுளித்துவரச்சொன்னயானைல் குற்றமறுபறங்கியிடகுதங்களத்தா. வாள்படுபுண்போலரிக்குங்கிரந்திசூலைவாங்காதசிறுசொறிசெம்புண்கள்போமே. ௱௧௫

பறங்கிபுண்-சூலைப்புண்-முடங்கல்இதற்குநிம்பம்.

புண்போகுமிவையெல்லாம்பறங்கிரோகம்புகழ்ந்துசெய்யும்வாகடந்தான்பொய்தானில்லை, புண்போகுஞ்சூலைபோமுடங்கல்திரும்பேர்மிருகசஞ்சீவிநெய்யைச்சொல்வோம், புண்போகுநெடுநாளைவேப்பம்பட்டைபுளாதிரஐயைந்துபலந்தான்றாக்கி, புண்போசநறுக்கிநீயஞ்சுபோலேபோட்டிடித்துப்பாண்டத்தில்பொருந்தவையே. ௱௧௬

பொருந்தவைத்துநீர்படியுமிருபத்தெட்டு புகட்டிநீயஞ்சுதினம்சவியிலாட்டு, வருந்தியதைப்பிசைந்துமேவடிகட்டிமைந்தா மாட்டநாலொன்ருய்வற்றக்காய்சி, விருந்தாகுநெய்படிதானிரண்டுவிட்டுவேப்பெண்ணெபடிரண்டுவெற்றிலைச்சாற், மருந்தாகும்வேளைச்சாற்மணத்தக்காளி மைந்தனேநொச்சிச்சாறுத்தாமணிச்சாறே. ௱௧௭

மணிச்சாறுமுடக்கொத்தான்குப்பைமேனி வகையாறுசாறுபடி மூன்றேமுக்கால், கணிப்பானசிறுகுறிஞ்சிசிவனார்வேம்புகாட்டுமல்லிபெருமருந்துளசிநொச்சி, கணிப்பில்லாத்துதுவளையழிஞ்சிவேளைதய

வானநாரத்தைசெங்கத்தாரி,பணிப்பானமுடக்கொத்தானுந்தமநாளி பண்பானமேனிசெருப்படிதானுமே. ௫௱௧௮

ஆமப்பாயிவைமூலஞ்கழஞ்சுமூன்று ஆனபாலிலாட்டிநீயின்னங் கேளு,ஓமப்பாவெண்காஞ்சினக்கார முற்றயிருசீரகமுமோமந்தானும், வேமப்பாசதகுப்பைகூடசப்பாலை வெள்ளுள்ளியுடன்பூலாவிருட்சந் தானும், நாமப்பாகுங்கிலியங்காசுக்கட்டிநலமானசண்பகப்பூநாட்டக் கேளே. ௫௱௧௯

நாட்டடாகழஞ்சிபொன்றுவகையொன்றப்பாநல்லபழச்சாற்றி லாட்டிவாங்கி, ஊட்டடாகளிப்பாக்குபத்துசேர்த்துவுறப்புகட்டு நெய்யிலேகலாச்சேர்த்து,மூட்டடாவடித்திறக்கிவைத்துக்கொண்டுமு ன்போலச்சூதம்ரண்டுகெந்திரண்டு,தீட்டடாகுக்கிலஞ்சுகெவுரிகால் தான்திறமானதுரிசியரைக்கழஞ்சுகூட்டே. ௫௱௨௰

கூட்டியேபழச்சாற்றாலாட்டிவாங்கிக் கொடுநெய்யிற்புகட்டிமைந் தாவைத்துக்கொண்டு, ஊட்டுவாய்நாள்மூன்றுசென்றபின்புவுண்டுவா மூன்போலேயுண்மைகேளு, வாட்டியதோர்மூன்றுவகைச்சூலைப்புண் கள்மாறுதகளாவாதஞ்சூலைபோகும்,நாட்டில்வளர்பதினெட்டுப்பறங் கிதீரும்நலமாகப்பத்தியமாய்க்கொள்ளச்சொல்லே. ௫௱௨௰௧

## புண்ணுக்குக்களிம்பு.

சொல்லுகிறேன்புண்களுக்குக்களிம்புதன்னை சூதமடாவராகன்ர ண்டுலிங்கம்நாலு,வெல்லுகிறேன்கெந்திநாலரையதாகும்விறகவிவை மூன்றுசாக்குமாட்டி, கொல்கிறதோராவினிடவெண்ணைவாங்கிகுறை யுமட்டுந்தினந்தோறுமாட்டிவாங்கி,செல்லுமடாதிசைக்கெல்லாமிகக்க ளிம்புதீராதபுண்ணெல்லாந்தீரும்பாரே. ௫௱௨௰௨

## திரிகடுகுபலாதிநெய்,

தீருமடாகுஷ்டநோயுங்குட்டம்புண்ணுந்திறமாகவுடம்பெல்லாங் களிம்புபூசி, வாரமுடனந்திக்குளிகைசொல்லுமைந்தனே புண்ணாறு மட்டுஞ்செய்வாய், நோமுடன்விரணத்தில்பூசிநீயும் நெருப்பிலேகாசி வெடுக்கவாட்டச்சொல்லு, பாரமுடன்திரிபலாதிநெய்யைமைந்தாபா டுகிறேன்திரிகடுகுதிரிபலையோடாறே. ௫௱௨௰௩

ஆறுடனேகொடி வேலிவேரின்பட்டை ஆறியசிவதைநிலவாம ணக்கன்வேறும்,வீறுடையமாமஞ்சள்பொற்கொன்றைக்காயும் வெற் றிபுரியதிவிடையங்கடுகுரோணி,வாறுகேள்மஞ்சள்ரமஞ்சள்பின்னு

ம்வட்டத்திருப்பிமலைதாங்கிவகைக்குழைந்தா, மீருமல்விராகன்மூன்றரையாத்தூக்கிவிரைந்தாட்டிநாழிநெய்யிற்கலக்கி காய்சே. கூஉச

தூதுவளைநெய்.

காய்ச்சுமுன்னேனள்ளிப்பாலுழக்குவிட்டுக்கருத்தாகவடித்துநீமடிக்சச்சொல்லு, விச்சானகுன்மமுதல்குட்டந்தீரும்வெண்குட்டம்பாண்டுவிஷக்கடியுந்தீரும், வாச்சிருந்தசூலைபோமுன்மத்தம்போகுமைந்தனே தூதுவளைநெய்யைச்சொல்வோம்,மாச்சதூலந்தூதுவளைவேப்பம்பட்டைமகத்தானசிந்திபிலைக்கொடியுங்கூட்டே. கூஉரு

கூட்டாபேய்ச்சுண்டைப்பழமுநீதான் கொடுங்கண்டங்கத்திரியின்வேருந்தோலும், நாட்டாவகைக்கங்கேசமுஞ்சுநாலுநலமாகவாட்டியேநாழிநெய்யில்,ஊட்டாவடித்திறத்துவைத்தூக்கொண்டு வொருபோதைக்கிருகழஞ்சுவுண்ணச்சொல்லு, பூட்டாவியாதியெல்லாம்நடுங்கிப்போகும்புகலுவோங்கலியாணக்கிருதம்பாரே. கூஉசு

கலியாணக்கிருதம்.

பாரப்பாமேகங்களிரண்டுபத்தும் படுவத்தைவிப்புருதி பாண்டுபாகம், நீரப்பாகலியாணக்கிருதங்கொண்டு செப்புகிறேன்மருந்தவகைதிறமாய்க்கேளு, நேரப்பநிலப்பனைவேர்தண்ணீர்விட்டான் நெருஞ்சியொடுகொடிவேலிநன்னாரிவேரும்,சேரப்பாவமுதலைவேர்சிற்றுமல்லி தூம்பிட்டிசித்தமட்டிசாரணைவேர்த்திராயே. கூஉஎ

திராயொடுவெழுக்குறுபாதிரிவேர்வில்வஞ்செப்பரியமுத்தக்காசுதாமரையின்றண்டு,திராய்லைவகள்வகைக்கங்கேபலத்தைக்கேளு சேடாமூன்றனாதான்தறித்திடித்து,தாரய்தூணிநீரிவிட்டுக்குறுணியாக்கிச்சொல்லுகிறேனிச்சாற்றைத்தடர்ச்சிவிட்டு, நீராய்கரும்புவெள்ளரிக்காய்பொன்னுங்காணிநெல்லிக்காய்பூசனிக்காய்முள்ளிலவந்தோலே. கூஉஅ

இலவந்தோலிலுப்பைபிலைச்சாறெல்லாமேன்மகனேவகையொன்றுபடியுமொன்று, நலமானவாவின்பால்படிதானிரண்டு நறுநெய்யும்படிரண்டுகற்கங்கேளு, பலமானநீதாடைவேர்சித்தமல்லிபோனநன்னாரியமுக்குறுவேர், மலமாற்றுஞ்சாரணைவேர்நெய்தல்மூல மலர்ந்ததாமரைவளையமுந்திரிகைப்பழமே. கூஉகூ

முந்திரிகைபேரீந்துகடுகுரோணிமுத்துவுறையும்வெட்டிவேர்மதூரங்கோட்டம்,மந்தமுறுமிலுப்பைப்பூமலர்க்காய்சந்தம்மாகாளிக்கிழங்குடனேதேவதாரம், மந்தாரமாஞ்சடாமாஞ்சில்வெட்பாலையரிசி மஞ்சிட்டியதிவிடையமஞ்சள்தானும், பந்தமுறுங்கார்கோலமிருசீரகமும் பண்பானசெவ்வியமும்பரிந்துதூக்கே. கூகூo

பரிந்தெடுத்துவகைக்கொன்றுகழஞ்சியொன்று பண்பாகவாட்டியேநெய்யிலிட்டு,எரிந்துதீவடித்திறக்கிவிராகனென்றுஇபலாகயுண்டிடவேவெழுப்புக்கமில்லை, கரிந்தெதாருமேகங்களிரண்டுபத்தாங்காட்டுமுன்னேகரியுண்டகனிபோலாகும், விரிந்தபிரமேகங்களிரண்டுபத்தும்விப்புருதிவிஷபாகம்பாண்டுபோமே. ௫௫௧

கவியாணக்குழம்புசகலவியாதிக்கும்.

பாண்டுபோங்கவியாணயைஞ்சொல்லப்பார்மகனே யிம்மாவினின்மையாகும், வேண்டியநேதார்நெல்லிக்காயதனிரோகவிநன்றாயிடித்திறுத்துப்படியுப்நாலு,தாண்டுபுகழ் வெள்ளைவெல்லம்பலத்தைதக்கேஞநயவாககாற்றுலாம்நிறுத்துச்சேர்த்துத், தூண்டுகொண்டுபண்ணயுழக்குசேர்த்து சுருளவதைக்குழம்புபோல்சுண்டக்காய்ச்சே. ௫௫௨

காச்சுவைத்தகுழம்பதற்குமருந்துகூட்டக்காண்மகனே திரிபலையும்வெட்பாலையரிசி, வாச்சபுகழ்திப்பிலியுங்கொடிவேலிவேரும்மகத்தானவோமமொடுகடுகுரோணி,விச்சயர்ந்த கொத்தமல்லிகாட்டுதிப்பிலிவிழாவரிசிமிளகுசீரகமஞ்சிட்டி, பாச்சடாவகையொன்றுபலந்தானென்றுபண்டானதிரிகோபப்பலந்தானேட்டே. ௫௫௩

எட்டேனேமுன்மருந்தைசேர்த்துக்கொண்டு இடித்துநீறாகக்கிவடியுஞ்சட்டி,விட்டுவாயுழக்கெண்ணெய்பாகிலப்பாவிரவியதூண்டுகொதிப்பிட்டபின்பு,சட்டேனேநூணத்தைத்தூவித் தூவிக்காய்ச்சடாயனம்போற்களறிவாங்கி, மட்டுடையபழங்கலசத்திட்டுவைத்துமைந்தனே கழஞ்சுண்ணவாறுகளே. ௫௫௪

வாறுகேள்பிரமேகங்காமாலைபாண்டு வளர்குட்டமுழுமைக்கிறிச்சினமுங்குன்மம், வீறுகவிழுந்துமுறிந்தெலும்புமூறும்விட்ட சந்துகாலுறுப்புமேவிப்போகும், தேறுதஅரிசூலமிடறுகொன்றைதெளிந்துசுபபாடுவான்சித்திபுத்தி,கூறுகவுண்டாகும்வெகுபிலமுமெய்த்துங்கூரையின்றித்திரைபோகுநரையும்போமே. ௫௫௫

நாட்பட்டசரத்துக்குமுந்திரிகைநெய்.

போமப்பாநாட்பட்டசரத்துக்கெல்லாம் புகழானமுந்திரிகைநெய்யையுண்ணில்,ஆமப்பாமுந்திரிகைவெட்பாலையரிசி யத்திதிப்பிலிகெந்தம்அதிவிடையம்நெல்லி, வெடிப்பாகிலவேம்புமிலாமிச்சம்வேரும் வில்வவேர்வகைக்கங்கேகழஞ்சுதூக்கி, தாமப்பாதனிநீரால்லட்டிவாங்கிததாக்கடாவாவினெய்யிற்படிதானென்றே. ௫௫௬

படிவிட்டநெய்க்குள்ளேதண்ணீர்காழிபாய்ச்சிநேந்தாக்கினியில்வைத்து நீயும், அட்டிவிட்டநீர்வற்றில் பதத்தைநோக்கி யப்

பனேவடித்திறுத்துக்கழஞ்சுமூன்று, குடிகொண்டசுரம்போகுங்காந்
தல்போகுங் கூரானவயிற்றெரிவுமிருமல்போகு,முடியற்றசெண்டை
யோஞ்சொரியும்போகு முதுசொல்லாந்திரிகோபவியாங்கேளே. ()

விபரம்கேள்சந்தனமுஞ்சிவதைநாணும் வெள்ளைக்குங்கிலியமி
ன்வைதிரிகோபமாச்சு,விபரமாய்த்தெரியாதமருந்தையெல்லாம் மென்
மக்கள்சொலக்கேட்டுவிளம்பிக்கொள்வாய், விபரமறியாதவர்களாகா
சசெருடன் விருணபழுபாகல்கொல்லன்கோவையென்பார், விபரமா
ய்த்திப்பிலிநெய்யதனைக்கேளு விடாதசுரம்போவதற்கு விள்ளுறே
னே. ௩௩௮

## திப்பிலிநெய்.

விள்ளுறேன் திப்பிலியுங்கடுகுரோகணி வெட்பாலையரிசியுடன்
கிழ்க்காய்நெல்லி, கள்ளமறாம்வில்வவேர்வேப்பம்பட்டை கடுதான்றி
க்கெந்தமடாகோடைதாளு,ெதள்ளுபுழுவாயிச்சமுந்திரிகைப்பழ
முஞ் சிறியதொருசண்பகமுமதிவிடையங்காளும், தள்ளுநீவகைக்கு
கேகாசுதூக்கிச் சுகமாகத்தண்ணீரிலாட்டிவாங்கே. ௩௩௯

வாங்கினதோர்பருந்துக்குத்தண்ணீர்நாழி வாக்காகநறுநெய்நா
ழிவார்த்து, பாங்காகபந்தாக்கினியைமூட்டிப் பதமாகவடித்திறுத்
துக்கழஞ்சிரண்டு, தேங்காததேன்குத்திநெய்யுஞ்சேர்த்து தின்றிட
வேசுரம்போகும்விக்கல்போகும், தாங்காதவுழலைபோம்அரோசிகம்
போந் தலைநோயுபிரமேகந்தணியுந்தானே. ௩௪௰

## சன்னிசுரத்துக்குச்சீதேவிநெய்.

தணிந்திடவேசன்னிமுதல்சுரத்துக்கெல்லாஞ் சாற்றுகிறேன்சீ
தேவிசெங்கழுநீர்நெய்யை, துணிந்தெடுப்பாய்சீதேவிசாறுபடிநாலு
சொல்லுகிறேன்பஞ்சிட்டிதாமரையின்பத்திரி, கணிந்தேதுலைமிலவங்க
ங்கடுகுரோகணி கனத்தகோட்டம்நன்னாரிமதுரங்கெந்தம், பணிந்தசு
ரக்கோரொன்றுவிராகன்றூக்கி மைந்தனேயாட்டியதைவடித்துக்கொ
ள்ளே. ௩௪௧

வடித்தநெய்தாருநெய்யதனைக்கழஞ்சியுண்டு மைந்தனேமேலுமந்த
நெய்யைப்பூசில், கடித்தசுரமெண்பத்துநாலுந்தீரும் கண்குளிரும்பு
ண்தீருங்கருஞ்சித்தி, படித்தினியாமின்னமொருநெய்யைச்சொல்
வோம் பண்பாகச்செங்கழுநீர்சாறெண்ணாழி, விடுத்தேதலயிலவங்கம
திமதுரங்கோட்டம் மிக்கசிட்டிசண்பகப்பூகடுகுரோணியே. ௩௪௨

ரோகணியுஞ்சந்தனமும்வெட்டிவேரும் தணுக்கமுறநன்னாரி
நீர்வள்ளிக்கிழங்கும், நாகமுறுபிலாமிச்சஞ்செங்கழுநீர்க்கிழங்கும் நரி
மிரட்டிமுந்தக்காசுவகைக்கோர்காசு, ரோகமுடன்றூக்கியதையாட்டி.

வாங்கி ரேகிப்பாய்மூன்றுபடிநெய்யிற்குள்ளே, ராகமுறக்காய்ச்சிவே
டித்துக்கொள்ளு நலமாகச்சுரங்கள்முதல்சன்னிபோமே. ௧௪௩

காயாகவாசத்துக்குஆடாதோடைநெய்.

போமப்பாகளங்சமெல்லாம்போவதற்குப் பூட்டுகிறேனடா
தோடைநெய்யைத்தானே, வேயப்பாகண்டவுடனேய்கவெல்லாம்வெ
ற்றியாழுந்தோடைக்காற்படிதானிரண்டு,நாமப்பாபசுவின்பால்படிதா
னிரண்டு நறுநெய்தான்படியிரண்டுஅத்திதிப்பிலி, ஆரப்பாதிப்பிலியு
ங்கொடுவேலிவேரும் அடைவாகயிந்துசக்குயெவாச்சாரங்களே.()

எவாச்சாரஞ்சத்திபிடசாரந்தானு மினைவெயல்லாமோரொன்று
கழஞ்சியொன்று, அவச்சாரமின்றியேபுடனேயாட்டி யப்பனேபத்தத
ணிலேவடித்துவாங்கி, மூவச்சாரமூற்றிரண்டுதேசகால மொவ்வொரு
கழஞ்சியாயுண்ணச்சொல்லு, மெவச்சாரமந்திக்குக்கழஞ்சுபாதி யெ
ன்மகனேயுண்ணைதனையியம்புறேனே. ௧௪௫

இயம்பவேநெஞ்சுவலிகுறுகுறுப்பு யிளைவலிகிறுகிறுப்புகாயாக
வாசம், இயம்பவேஎரிகுனுபித்தப்பாண்டு யெழுமூலமுள்மூலைக
வைவெப்பு, இயம்பவேபழஞ்சுரமும்வெப்புப்பார்வை யியல்பானவ
கிரண்டுமக்கினிமாந்தம், இயப்பவேபறந்துவிடும்விபாங்கேளு இவைக
ளெல்லால்நதிக்குஇயல்புகூட்டே. ௧௪௬

நாட்பட்டசுரத்துக்குமுலைப்பால்நெய்க்கிருதம்.

கூட்டடாவேர்க்கொம்புகியாழம்வைத்துக் கொடுத்திடவேநோ
ய்களெல்லாஞ்சித்தியாகும், சீட்டடாமுலைப்பால்நெய்சஞ்சீவியப்பா
நெறியாகமுலைப்பால்தான்படியுமிரண்டு, நாட்டடாகொடுப்பைவேர்
வெள்ளரியின்விரையும் நல்லதொருபூசணிக்காய்விரையுஞ்சேர,மூட்ட
டாநெலவிமுள்ளிமதுரமப்பா முறையாகவிருகழஞ்சுஎலரவாட்டே.

ஆட்டியபோதர்மருந்துக்குள்நெய்யும்நாழி யடைவாகவிட்டுநீவடி
த்துமைந்தா. ஊட்டுவாய்கழஞ்சிரண்டுமேலும்பூச வுடல்வெக்கைசுர
வெக்கையுடம்புலர்த்தல், வாட்டிவருமெலும்புருக்கிகளைகள்காசம் வ
ரட்சியொடுபிரமேகமுள்வெட்டையோடு,சாட்டியேயமறைத்தாப்போ
ல்காணுதோடுங் கருத்தாகயின்னமொருநெய்யைக்கேளே. ௧௪௮

ஆடாதோடைக்கிருதம்.

கேட்டிடவேநாட்பட்டசுரத்துச்செல்லாம் கிருதமடாதோடை
வேர்பிழ்க்காய்நெல்லி, வெட்டிடவுங்காட்டுபல்லிவேகுப்பை வெ

விப்பருத்தியொடுகுப்பைமேனி, நாட்டில்வளர்வழுதலைவேர்நத்தை
ச்சூரி நலமானமருட்கிழங்குஅப்பைமூலம், ஊட்டுவாய்வசம்புள்ளிக்க
ஸ்தூரிமஞ்சள் உற்பனஞ்சேர்நல்லபாம்புகண்டந்தானே. ௪௯௯

கண்டமொடுவிராசனஞ்சேமூன்றுநாக்கி கலாட்டிநாழிநெய்யி
ற்கலந்துகொண்டு, கண்டமெனும்நல்லெண்ணெய்ரண்டெண்ணெய்க
லந்திடுவாய்வகைரண்டுபடிதானென்று, கண்டிதமாயிவையெல்லாங்கா
யும்போது கருங்குங்கிலியம்ரண்டுகாசுநாக்கி, கண்டிடமாய்நிம்பபழ
ச்சார்ஊற்றக்கேளு கனிந்தபழமஞ்சஞ்சேபிழிந்துஆட்டே. ௫௱

வெள்வேல்நெய்.

ஊட்டியேவடித்தப்பாவைத்தாக்கொண்டுவள்ளூக்குக்காசெண்ட
தானுண்ணச்சொல்லு, நாட்டியேமேலுக்குந்துவாலைபோடு நாட்பட்
டசாந்தனிபுமின்னமொன்று, வீட்டியேவெல்நெய்யைச்சாற்றக்கே
ளுவெள்வேலங்வேநடனேகளர்ச்சிவேரும், நீட்டியதோர்பூலாவேர்
நாயுருவிவேரும் நேரானவிஷ்ணுகிரந்திவேரே. ௫௱௧

சந்தனாதிநெய்.

வேநடனேவசம்புள்ளிசமனாய்க்கேளு மீறுமற்கழஞ்சியைக்கா
ஆட்டிவாங்கி, ஆரவேநாழிநெய்யிற்கலந்துகொண்டு அப்பனேகடிக்கி
ரித்தாக்கழஞ்சுகொள்ள, வீரமுள்ளபழஞ்சாங்களைத்தாந்நீரும் வெ
ற்றியுள்ளநெய்யாச்சுதயிலங்கேளு, தாருணையந்நவ்வொழுகுஞ்சந்த
னாதி தனிநெய்யைச்செப்புகிறேன்சார்ந்துகேளே. ௫௱௨

சார்ந்துகேள்சந்தனமும்வெள்ளிலோத்திரந் தனிமதுரமுந்திரி
கைமூக்கழஞ்சு, சாந்துவேபசவிளைவெலைம்பாலிலாட்டி தண்ணீர்நா
ன்படிபொன்றில்கலக்கிக்கொண்டு, சார்ந்துநின்றுநெய்தானாழியூற்றி
தயவாகவடித்திறுத்துதலையிற்றேய்த்து, சாந்தமாயரப்பிட்டுமுழுகச்
சொல்லு தாபசுரம்பூதசுரந்தணியும்பாரே. ௫௱௩

சந்தனாதித்தயிலம்

பாரப்பாஇன்னமொருசந்தனாதி பகருகிறேனமுக்குறுவேர்பொ
டியும்நாழி, கோப்பாசித்தாமுட்டிப்பொடியும்நாழி சிறப்பானகொம்
பரக்குப்பொடியும்நாழி, நேரப்பாயிம்மூன்றுபதக்குநீரில் நீயிட்டுநா
லொன்றாய்க்குறுக்கிவாங்கி, ஆரப்பாநல்லெண்ணெய்நாழிவிட்டு அப்
பனேகுழம்புமோர்நாழியூற்றே. ௫௱௪

மோர்விட்டுநன்னாரியாத்தைகோட்ட முசிழ்மதுரஞ்சதகுப்பை
கடுகுரோணி, வார்விட்டகச்சோலந்தேவதாரம் மஞ்சளொடுமரமஞ்சள்
கஸ்தூரிமஞ்சள், மாரிட்டபெருங்குரும்பையமுக்குறுவேர் மஞ்சிட்டி

கெந்தமொடுநாகப்பூவும்,நேரிட்டவகையொன்றுவிராகவென்றுநிற் ௲௫௫
த்தியேட்டியதைதக்கலக்கிக்காய்ச்சே.

## ஆடாதோடைத்தயிலம்மதுக்காளித்தயிலம்.

காச்சப்பாமூன்றுநாள்கொதிக்கச்செய்து களாவேநாலாநாள்வடி
த்துமைந்தா, தேச்சப்பாவுடம்பெல்லாஞ்சிரம்பண்ணு தீராதசுராந்த
ணியுமுடன்புக்கேதறும், பாச்சப்பாதோடைவேரெண்ணைதன்னைப் பா
டுகிறேன்மதுக்காளித்தயிலமென்பார், வீச்சப்பாயதிமதுரம்வேப்பம்
பட்டைவிழியிலித்தோல்வெம்பினிடவித்துவாங்கே. ௲௫௬

வாங்கடாகிராய்வேருமத்தம்வேருமகத்தானகுன்றிவேர்மேனி
னேரும், பாங்காகுமிந்தப்புமிவைகளெல்லாம் பரிவுடனேவிராகவெ
ன்றுதாக்கிக்கொண்டு, ஆங்கடாதோடையிலைச்சாறுவிட்டு ஆட்டிநீயச்
சாறுநாழிவிட்டு, தேங்காதநல்லெண்ணெய்நாழிவிட்டு தியிட்டுப்பத ௲௫௭
மாகவடித்துக்கொள்ளே.

வடிக்கிறுத்ததயிலத்தைமேலுமிட்டு மைந்தனேயுள்ளுக்குக்
கொள்ளச்சொல்லு,பிடித்தநோருசன்னிபோஞ்சுரமும்போகும்பேர்
பெரியமோபெண்ணைசிதம்போகும், தடித்தமோர்நாலுபடியெண்ணெ
ய்நாழி சார்பணைசித்தட்டிவேர்த்தோலுங்கூட, படித்தகோட்டம்
வேர்க்கொம்புபொன்மெழுகுதானும் பாங்காணமுசட்டைவேர்மதுர
மிந்தே. ௲௫௮

இந்துப்புமஞ்சளொடுதேவதாரமியவானநன்னாரிமாகாளிமூலம்,
சிந்துபுகழ்பெருங்குரும்பைதக்கோலம்புட்டில் சிந்திவேரிலாமிச்சஞ்
சிறுசிணைவேரும், சந்ததுறுந்துகாரொடுக்கச்சோலமேலஞ் சாதிக்காயி
லவங்கப்பத்திரிதானும், பந்தமுறுஞ்சாணைவேர்திப்பிலியின்மூலம்
பாங்காகவகைக்கந்கேகாசுதூக்கே. ௲௫௯

## சீதேவித்தயிலம்.

காசிடைதானிறுத்தங்கேமோரிலாட்டிக் கலக்கிநீகாய்ச்சியேவ
டித்துமைந்தா, நேசமுடன்கழுத்துக்கிழ்தேய்த்துப்போடு நிமிஷத்தி
ற்குளிர்காய்ச்சல்பித்தருட்சை, பாசமுறுமேந்துசுரஞ்சீதருட்சை பலசு
ரமும்விஷசுரமுப்பறக்குங்கண்டாய், தேசமறுஞ்சீதேவித்தயிலங்கே
ளு தீராதசுரமெல்லாந்தீருங்காணே. ௲௬௰

காணப்பாசீதேவிச்சாறுநாழி கலாவார்சிந்திச்சாறதுவுநாழி,
ஊணப்பாபெண்ணெயுரிநெய்யவ்வண்ண முத்தவதிமதுரமொடுதேவ
தாரம், பூணப்பாநாகப்பூகோட்டங்கெந்தம் புகழ்பெறவேமஞ்சிட்டி
குரும்பைதானும், மூணப்பாவெட்டிவேர்குருக்கத்திப்பூவு முயர்பரா
ஞ்சில்அகிற்கட்டைகொம்பாக்கே. ௲௬௧

அரக்குடனேயிலைமிச்சம்தாமரையின்வளையம்அதினரும்புசெஞ்ச
ந்தமேலந்தானும், இரக்கமுறுநன்னாரிகச்சோனக்கிழங்குவலமொடுயில
வங்கப்பட்டைபத்திரியும், காக்கமலநெய்தல்வேர்கடுகுரோணிகானசி
த்தாமட்டிவேர்பெருங்குரும்பை,திரக்கவேயாத்தையுடன்திப்பிலிதா
னுஞ்சேரவேவகைக்கொவ்வோர்காசுதூக்கே. ௩௬௨

செங்கழுநீரெண்ணை.

தூக்கியேபால்விட்டுஆட்டிவாங்கிகூட்டிபெரி மங்காக்கினிமைமூ
ட்டி,தாக்கியேவடித்திறுத்துவுடம்பிற்போடுசகலசுரமேலெரிப்புதாக
ம்போகும், தேக்கியேயின்னமொருமார்க்கங்கேளு சீதேவிச்செங்கழு
நீர்சாறுநாழி, நீக்கமில்லாநெய்யுடனேயெண்ணெய்நாழிசேருமேல்
மருந்தைநிறைக்கிறேனே. ௩௬௩

நிறைப்பானவெட்டிவேர்கடுகுரோணிசேர்செந்திபதிமதூரநிறை
தானொன்றாய், அரையப்பாமும்மூன்றுகழஞ்சுதூக்கி யப்பனேகலக்கி
யேவடித்துநீயும், கரையவேயுள்ளுக்குமேனுமூட்டுகடுஞ்சுரம்விஷசுர
முங்காணுதோடும்,புரையுடயநெடுஞ்சுரமும்வெட்டைபோகும் பூட்டு
கிறேனின்னமொருமோரெண்ணெய்கேளே. ௩௬௪

மோரெண்ணெய்.

இன்னமொருமோரெண்ணெய்மோர்படித்தானுஇயலானபழ
ங்கடிபடிதானொன்று,பின்னமில்லாநல்லெண்ணைபடிதானொன்று பேர்
பெரியசித்தமட்டிவேர்பலந்தானு, சன்னமாயிடித்ததற்குள்நானுப
டிசலத்தைதாக்கடாநாலொன்றாய்த்தனித்திறுத்து, சொன்னபடியி
வையொன்றாய்க்கலக்கிகற்பஞ்சூட்டுகிறேன்வகையாகச்சூட்டுறேனே

சூட்டுகிறேன்குறுந்தொட்டிவேர்த்தோலி நன்னாரிசுருக்குடை
யமூசட்டைவேர்முத்தக்காசு, திட்டியதோர்சிந்திலசாரணையிலாமிச்சு
சிறுகிரைவேநடனையமூக்குறுவேர், மூட்டியதோர்மோட்டமொடுஇ
ந்துவதிமதூரமோங்குபுகழ்வேர்க்கொம்புசெவ்வள்ளிக்கொடியும்,நாட்
டியதோர்பொன்மெழுகுகச்சோலமேலம்நல்லமஞ்சளிலவங்கபத்தி
ரியும்நாட்டே. ௩௬௬

பத்திரியும்சாதிக்காய்சிற்றரத்தைகிராம்புபழந்தேவதாரமொடு
திப்பிலியின்மூலம், முத்திரியுங்கடல்நுரையும்வகைக்குமொருகழஞ்சு
முறையோடேமோர்விட்டுஆட்டிவாங்கி, இத்தனையுந்தாளியிலேசலக்கி
யப்பாயியல்பாகமூன்றுநாள்சிறுகொதியுமிட்டு,வத்தியதாயதம்பார்த்
துவடித்துவாங்கிவளமாகக்கழுத்துக்கீழ்தேய்த்தாற்போமே. ௩௬௭

ஆறப்போட்டரைக்கட்டிகைக்கப்பால்நீயும் அழகானதலைக்குமந்த
வெண்ணெயிட்டு,தேறப்பாசீயக்காயரைப்புத்தேய்த்துசிந்தையில்லாவெ

ந்நீரைமுழுக்கச்சொல்லு, மாறப்பாவொன்றுமில்லைவிஷசுரங்கள்மாற
ல்மகாவாதசுரம்வெட்டைபித்தமொடுகொந்தல்,மீரப்பாயத்திசுரங்குளி
ர்தாபசோபம்நெஞ்சரிப்பு அனிசுரங்கள்பலசுரங்கள்போமே. ௱௬௯

## அரக்குமோரெண்ணெய்.

பலசுரங்கள்போவதற்குஇன்னமோரெண்ணெய்பகருகிறோம் அர
க்குமோரெண்ணெய்மைந்தா,சொல்லரியகுறுந்தொட்டிவேர்பலமோர
ஞ்சுநாளாக்கியஞ்சுபடிசலத்திலிட்டு, நிலவரமேயொன்றாக்கிகொடபா
க்குதிறுத்துவிடிரண்டாரைபாம்பலத்தையொருகிளியாய்க், கலவாமில்
லாதசலமூன்றுமரைப்படியாய்காய்ச்சடாவமுக்குறுவோஞ்சுபலமே,

அஞ்சுபலம்வெரிடித்துத்தூளாயாக்கி யதற்குமொருமூன்றுபடி
சலமும்விட்டு,பஞ்சுறவேயந்தக்கியாழநீ நம்பாரடாயதைப்படிதான்ப
மூமோர்சேரு,வஞ்சமில்லாசாறுபடி யெண்ணெய்நாழிமருந்துவகைசர்
க்கத்தில்வரிசைசொல்ல,கஞ்சமுள்ளிவெட்டிபிலாமிச்சஞ்சீந்தில் தனி
முசட்டைகுறுந்தொட்டிவேருங்கூட்டே. ௱௭௰

கூட்டடாநன்னாரிபுழுகைவேரும் கூறரியசாரணையுஞ் சிறுசிறை
வேருங்,காட்டடாகோட்டமதியதிமதுரமிந்துசக்குநல்லமஞ்சள் கச்
சோலமேலமிலவங்கம், பூட்டடாசிற்றரத்தைதிப்பிலியின்மூலம்புகழ்
சாதிக்காய்தகரஞ்செவ்வள்ளிக்கொடியும்,மாட்டடாதேவதாரமிலவங்
கப்பத்திரிமகிழ்வாகக்கழஞ்சொன்றுமோரிலாட்டே. ௱௭௧

ஆட்டியேகலக்கியோர்தாளிசேர்த்து அடுப்பேற்றி மூன்றுநாள்
கொதிக்கவைத்து, இட்டியேநாளாநாள்வற்றக்காய்ச்சிசிராகுர்பதங்க
ண்டுவடித்திறுத்து, போட்டியேயில்லாமல்நான்குநாளுக்கொருநால்பூ
சியேமுழுகிவரப்போகுநோய்கள், ஊட்டியாய்வந்த பலசுரங்கள்வெ
ட்டைகுடுமோடுமேகடலிறுரைத்தயிலங்கேளே. ௱௭௨

## கடல்நுரைத்தயிலம்.

கேளப்பாகடல்நுரையுங்கோட்டமஞ்சள்கெந்தமொடுபொன்மெ
ழுகுவிலாமிச்சம்வேர்,வாளப்பாசதகுப்பைமுத்தக்காசு மஞ்சிட்டியிலு
ப்பைப்பூகடுகுரோணி,வேளப்பாபிசின்கம் பிபெருங்குரும்பைவெட்டி
வேரிந்துவுடன்வேர்க்கொம்புநாறு, மாளப்பாவொவ்வொன்றுகாசு
நூக்கிமாண்பாகநீமோரிலாட்டுஆட்டே. ௱௭௩

## சுரத்துக்குவெருகெண்ணெய்.

ஆட்டியேயெண்ணைபடியொன்றுவிட்டு ஆறுபடிதண்ணீர்விட்ட
டுப்பிலேற்றி, மீட்டியேவடித்திறுத்துவுடப்பிற்றேய்த்தகிலேயான சுரங்

தீருங்காந்தல்தீரும், வாட்டியதோருடல்நோய்கள்பொறுத்துபோகு மவாயினில்நீரூறல்காமறட்சிபோகும், நாட்டியேவெருகென்னுங்கத் தூக்கெல்லாம்கல்லபியோகமடாநாடிப்பாரே ௬௱௭௪

நாடினதோர்வெருக்கம்வேர்சித்தாட்டிநல்லசிறுகாஞ்சொறியவரி வேரும், பீடுபுகழ்தேவிதாளிநொச்சிபெருங்காந்தையினைவகைக்கு ப்பலந்தான்பத்து, நீடிதனைத்துவளக்கிப்பாண்டத்திலிட்டுநீரதற்கு அறுகுறுணிநிரப்பவிட்டு, வாடியனைவூட்டியேஎட்டொன்றாக்கிவாங்கி நீகோலரக்குக்கியாழங்கேளே. ௬௱௭௫

கோலரக்குபலமொன்றுநாழிநீரிற்குலித்திட்டுப்படியாகவடி த்துக்கொண்டு,காலரச்சென்னெய்படி பெண்ணெய்விட்டுகலந்தமோ ரிருகுறுணிகளைவிட்டு, வேலைத்தையதிலிடையமுத்தக்காசுவெட்பா லைபரிசிகோட்டம்வாய்விளங்கம், வாலமஞ்சள்திரிகடுகுகொடிவேலி யோமம்மரமஞ்சள்கருவேம்புகடுகுரோணிதானே. ௬௱௭௬

கடுகுரோகிணியகிலுங்கெந்தகச்சிட்டிகஸ்தூரிமஞ்சளொடியிலவ ங்கப்பட்டை, அடுசுகந்தப்பைசெவ்வியநற்றங்கோலப்பனை வெ ள்ளுள்ளிதிப்பிலிபின்மூலம், தடுகுபுகையூறல்சிறுதேக்குதானுந்தனி த்தவிளயகாற்பலமுந்தானேவாங்கி, மடிகவேகொதியிலாட்டிவாங்கி முறைப்போட்டுநாலுதினங்கொதிக்கச்செய்யே. ௬௱௭௭

கொதிப்பிட்டுஐந்தாநாள்வடித்துமைந்தாகூசாமலுள்ளுக்குக்கொ ள்ளச்சொல்லு,கதிகெட்டபாறல்பேர்முறைக்காய்ச்சல்போங்கடுகைகாய் ச்சலதிசாரசுரமும்போகும்,விதிகெட்டதேகவீக்கசுரமும்போகுமிக்க வசீரணசுரமும்பூதசுரம்போகும், பதிகெட்டவிஷசுரமுமாறல்சுரமும் பலசுரமுமிவற்றுவேபறந்துபோமே ௬௱௭௮

பறந்துபோம்சீதசுரமதிலோர்பாகம்பாடுகிறேன்வெருகிலையுங் க ண்டுமூலம்,சிறந்தவில்லைசாரணைவேர்பேராமட்டி. சித்தமட்டியமுக்கு று விஷ்ணுமூலி, சுறந்தபடிபலமொன்றாயிடித்துவாங்கிக்காய்ச்சடா இ ருகுறுணிசலந்தான்விட்டு, மறந்திடாதெண்ணெய்படியொன்றுவிட் டுபவிற்காவிவெள்ளையிடபால்படிதான்ரண்டே. ௬௱௭௯

பால்விட்டுஆவின்மோர்படியும்ரண்டுபாச்சியே மாமஞ்சள்மதுர ஞ்சிட்டி, சாவிட்டயிலாமிச்சம்நன்னாரியாத்தைசந்தனமுங்கூவிளத்தி ன்சனைதயுமிக்க,சேவிட்டகோட்டமுடன்திரிகடுகுபலையுந்தேவதாரக்க ட்டைசேர்த்தும்,கோவிட்டவிராகனென்றுவகைக்குத்தூக்கி குழையா ட்டிவகைக்குமைந்தாகொள்ளச்சொல்லே. ௬௱௮௰

ச்சுரங்களுக்குப் பசுவின்மோர்க்குள்ளேயூட்டு, விடுத்திடாச்சுரமெல்லாம்விட்டுப்போகும் மீறியதோர்சிலேற்பனத்தின்சுரத்துககெல்லாம் கொடுத்திடாய் சுரகாசகுடோரிமாத்திரை கூறுவேன்மருந்துவகைகூறுவேனே. (௫௫௪)

சுரகாசத்துக்குத்தாளகக்குளிகை.

கூறுவேனரிதாரமிரதஞ்சுக்கு கூர்மையுறும்வெண்காரந் திப்பிலிதானு, மீறுமேசம்பாகங்கரிப்பான்சாற்றில்வெண்ணெய்ப்போல்சாமமொன்றுஆட்டிவாங்கி, ஊறுமேநொச்சிச்சாற்சாமமொன்று ஊராட்டிப்பாவட்டங்காய்போற்கட்டி, தேறுமேயிஞ்சிநீர்தேனிற்சேர்த்துதுடமாகவுண்டையொன்று கொடுத்திடாயே (௫௫௫)

கொடுத்திடவேசுரகாசஞ்சுவாசகாசங் குத்துருமல்கெட்டிருமல்குறுகுறுப்பு, விடுத்திடவேசரம்பாய்ந்தாற் போலேபோகும்வீறங்கச்சுத்தியுடமருந்துசொல்வேன், கொடுத்திடவேநாபிக்குக் கீரைச்சாற்றில்கூட்டுவாய் தினமொன்று பழச்சாற்கொண்டு, அடுத்திடவேநாளொன்றுசிலேதான்சுற்றி யப்பனேதாளகத்தின்சுத்திகேளே (௫௫௬)

தாளகத்தையரந்தோல கியாழத்திலிட்டுத்தயவாக மறுதினத்திலெடுத்துக்கொண்டு, மீளகத்திலுயிரெல்லாம் நோயைத்தள்ளிவிடாதசுரமனைத்துக்கும்விபரங்கேளு, தாளகத்தைவலுப்பிக்குங் கற்பூராதிகாயத்திரிமரத்திரையின் கட்டுதானும், கீழகற்றுகற்பூரப்பிரதமிககக்கிருபையுயர்சாதிக்காய் சமனுயாட்டே. (௫௫௭)

சுரத்துக்கு உண்டை,

ஆட்டியதோர்தூளிடைக்குரொட்டிவாளம் அப்பனேசேர்த்ததனைக்குமரிச்சாற்றால், தீட்டியதோர்சாமம்நீயரைத்துவாங்கிச் சிறுவுளுந்துப்பிரமாணமுண்டைகட்டி, நாட்டியதோர்சர்க்கரையி லீய்ந்தாயானால்நலமானயெட்டுவகைச்சுரமும்போகும், நீட்டியதோருடல்பிந்துகொடுத்தாயானால் நின்றுபோங்கடிகையொரு மூன்றுமூன்றே. ()

வணதிகெசாங்குசரசம்.

மூன்றுநாழிகைக்குள்ளே சுரங்கள்நிற்குமுறையாகப் பத்தியங்களிச்சாபத்தியம், மூன்றுநாழிகைவணதிகெசாங்குச ரசத்தையுரைக்கிறேன்ரசந்துத்தம்நாபிநாகம், தான்றுனாள்மடைத்தாரம் வாளங்கெந்திசொர்னம் லோகமிரண்டுஞ்சமனுய்ச்சேர்த்து, தான்றுநாளுத்தமத்தாளிற்சாற்றில் தயவாகவேழுபிரகாரமாட்டே. (௫௫௯)

ஆட்டடாமத்தஞ்சாற்மணித்தக்காளி யடவாகமுன்போலேயரைத்துயாற்றி, நீட்டியேபொரிகாரமாட்டிவாங்கசினைவாகக்குகைக்குள்ளே

தடவிப்பின்பு, ஊட்டியேயுண்டைதனைக்குளைக்குளிட்டு வுறவுவேர் வெண்காரமரைத்துமேலு, மூட்டியேதெரியாமலேமூசிலே முறையாக ச்சுற்றிநீமண்ணுஞ்சேரே. (ருசுய)

மண்செய்துபாண்டத்தில்நடுவேதானு மைந்தனேதமரிட்டுவோ டுபோட்டு,திண்செய்துஅதன்மேலேமணலைக்கேளு திறமாகநாலுவிர ற்கடையுமிட்டு, பண்செய்தகுகைதனைமண்மேல்வைத்துப் பாங்காக மேலுமந்தப்பாண்டத்துள்ளே, தண்செய்தமணலதற்குமுக்காலிட்டுத் தயவாகமேற்சட்டிகவிழ்த்துமூடே. (ருசுக)

மூடியேயெண்சாமங்கமலவன்னி மூட்டிநன்றாயாறியபின்கல்வத் திட்டு, நாட்டியேகணேசர்க்குப்பூசைசெய்து நலமாகத்தூளாக்கிச்சிமி ளில்வைத்து, நீட்டியேநோயறிந்துகுன்றிபிடையூட்டுநிலைத்துநின்றவி ருவகையாம்விஷங்கள்தீரும், வீட்டியேயனுபானம்வெற்றிலையிற்பொ திந்து மென்று தின்னச்சொல்லங்கேவிபரங்காணே (ருசுஉ)

நீராமை-கவுசி மகோதரத்துக்கு-உண்டை.

காணப்பாசலக்கழிச்சல்குட்டரோணங் காயாசுவாசமகோதரத்து க்கெல்லாம், பூணப்பாசீனியிலேயுண்ணச்சொல்லு புகழாகவயிற்றுவ லியாதிக்கேதான், ஊணப்பாகாட்டாமணக்குநீரி லூட்டுவுற்றவெள் ளைச்சாரணைநீர்சுரத்தைத்தள்ளும்,தோணப்பாதிரிகடுகுபொடியிலூட் டு சுகசன்னிமுதலானதெல்லாம்போமே. (ருசுந)

போமப்பாயிஞ்சிச்சாற்றுள்ளேயுண்ணப் பொதுவானதிரிதோ ஷம்போகும்போகும், வேமப்பாசூலைக்குப்பெருங்காயத்தூட்டு மே லுமினியனுபானம்வினையமாக, தாமப்பாசெய்து வேபிணிகளெல்லா ம்போகுந் தயங்காமற்பத்தியமாயிருக்கச்சொல்லு, ஆமப்பாயஷ்டகு ன்மம்நீராமைகவுசி யப்பனேமகோதரமுந்தீரக்கேளே. (ருசுச)

கேளப்பாமகோதரத்துக் குண்டசிதன்னைக் கெட்டியாய்ச்சொல் லுகிறேனிருப்புச்சல்லி, நாளப்பாசெம்புதுத்தம்நாகமூன்றும்நலமாக வெவ்வேறேசல்லியாக்கி, நீளப்பாவகையொன்றுகழஞ்சியொன்றுநே ராகயிந்தும்புகிலினைகெந்தி, வாளப்பாமஞ்சேசிலையுங்கெவுரிதானு பா ருமலொவ்வொன்றுகழஞ்சிதூக்கே. (ருசுரு)

தூக்கியேபொடிசெய்துவைத்துக்கொண்டு சொல்லுகிறேனயத் தகட்டையெருக்கம்பாலில், தாக்குவாயாழாக்குக்குள்ளேநீயுந் தயவா கமூன்றுதினமூறிப்பின்பு, ஆக்கியதோர்முன்தகட்டுப் பொடியுங்கூட வமைத்ததற்குள்ளெருக்கம்பால்சிறுகவிட்டு, வீக்கியேபழச்சாறும்அ ரைக்கால்விட்டு விரவியொருகாகத்திலடைத்திடாயே. (ருசுசு)

அடைத்ததோர்மருந்தனைரவியிலெணைத்து வன்றுடங்கிண்டி வரத்தினத்தானேரூழ, புடைத்ததோரவிபட்டுவெதநீறிப் பொன்மெ ாருபோலிருக்குமொன்பதாநாள், உடைத்ததோருண்டைக்காயைப் போலு முருட்டிநீருலரவைத்துக்குழலிலிட்டு, படைத்ததோர்வியாதி க்கு அனுபானங்கள் பகருவேன்மைந்தர்கேள்கண்டடாயே. (௩௯௭)

கண்டடாய்வியாதிகண்டு அனுபானஞ்சேர்த்துக் காட்டுமாற்றிரு கிறவியாதிகேளு, மண்டடாய்மகோதரமுஞ்சலக்கோவையிவை மதி யழிக்குநீரகமைகளுசுபாண்டு, வண்டாய்வலிகுன்மங்கெதி குன்மந்தா னும்மகத்தானரத்தகுன்மம் வெப்புப்பார்வை, தெண்டிடாய்கடிகுன் மமேலுங்குன்மம் திரிகுன்மம்விஷபாசந்சோமம்போமே. (௩௯௮)

திலோதாராயுண்டை.

பேரமென்றகிரிச்சிணக்களாலும்போகப் பூட்டுகிறேன்திலோதா ரையுண்டைதன்னை, வேமென்றநாபிகெந்திருதயிந்தா மென்கவுரிபெ ருங்காயந்சவர்க்காரந்தருக, ஆமென்றகோர்வாளம்நஞ்சுபோக மிவை யெல்லாஞ்சமனாகத்தூளாய்பட்டு, வேமென்றவோடாட்டால் பழச் சார்வார்த்து வெண்ணெய்போலாட்டிடாக்குவாங்கே. (௩௯௯)

வாக்கியதோர்மருந்ததனை மிளகுபோல மணியாக்கிக்குழலிலே வைத்துக்கொண்டு, வாங்கியதோரனுபானம் வெல்லம்நெய்யாம்வள மானபழச்சாறும் சுருக்கிச்சொன்னேன், தேங்கியதோர்வியாதிகேள் சூலகாயந்திறம்பெரிய வயிற்றுநோய்களைப்போயும், பாங்கியதோர்பெ ருவயிறுசெண்டைகுன்மம் பறந்தாலும்நீர்க்கோவைதிரும்பாதே. ()

சுராங்கிஷம்.

பாரப்பாசுராங்கிஷத்தைபுரைக்கக்கேளு பண்பாகப்புறக்கருவும் அகக்கருவும்புறக்கி, பாரப்பா ண்ணிரண்டு லட்சம்பாட்டில்பாடினே னைந்நூறுயெண்பத்தைந்தும், பாரப்பாநோயெல்லாம்மத்தியோடும் பண்டிதருக்கிந்நூல்பழையதாகும், பாரப்பாநாலுதிக்குய்யோகசித்தர் பார்த்திருப்பார்பொருளாசை பாரார்காணே. (௪௱௧

காணப்பாருதமொன்றுசெந்தியொன்று கருமந்தம்விளைமூன்று சுக்குநாலு. ஊணப்பாதிப்பிலியும்நாலுநாக்கு வுளைக்கவதைதூளா யாட்டியடைத்துக்கொண்டு, பூணப்பாகுன்றியிடைபழச்சார்தன்னில் புகட்டிடுல்சுரம்போகும் விபரங்கேளு, தோணப்பாபழச்சாற்றிலின் சிச்சாற்றில் துவளவளைவெவ்வேற சாமம்ரண்டே. (௪௱௨)

ரெண்டாகுஞ்சாமமனைகடலைபோலே யெண்மகனேபிடித்துலர் த்திவைத்துக்கொண்டு, ரெண்டாகுஞ்சுடுவெந்நீர் தன்னிலூட்டவெ

ண்சுரமூர்த்திசுரமுஞ்சன்னிபின்னு, மூண்டாகும்விஷசுரமுஞ்சன்னி தோஷந்தானு முற்றமுறைதின்சுரமுமொழிந்துபோகும், அண்டாது சுரமெல்லா மெய்விட்டோவுறைகிறேன் துத்தாசத்தாண்மைபாரே.

### துத்தாசம்.

ஆண்மையென்றதுத்தமொன்று துருசுவொன்று அரிதாரந்தானொன்றுசூதமொன்று, வாண்மையென்றகெந்தியொன்றுசிலைதானொன்றுவைமந்தனேயிவைசேரத் தூளாயாட்டி, தாண்மையென்றசட்டிக்குளிட்டுப்பின்பு சாரணையிலைச்சாறுபடிகால்விட்டு, கேண்மையென்ற வெண்கலக்கிண்ணியாலே கொர்ச்சிக்கஅரைப்பே சிலைசெய்யே, (௩௭௪)

சிலையதுமண்செய்து மண்ணுமிட்டு தீபாக்கினியாலேசாமமொன்று, சாலைசெய்தாரியபின்கல்வத்திட்டுத் தக்காளிச்சாறுவகைபிரண்டுஞ்சேர்த்து, சேலைசெய்துமயனம்போல் வழித்துநீயுங் கிறுபாறுப்பிரமாணமுண்டைசேர்த்து, காலைசெய்ததனுபானம் பூரஞ்சூடன்கஸ்தூரிசிறக்கவதிற் கலந்துஆட்டே (௩௭௫)

### குளிர்காச்சலுக்குப் பாஷாணவுண்டை.

ஊட்டிஞல்மாறல்போ முறைக்காச்சல்போகும் உத்தமனேதேளிவிடச் சுரமெல்லாம்போகும், ஆட்டிஞலண்டாண்டங் குலுக்கியாடும் அறுபத்துநான்குசுரமனைத்துமோடும், காட்டினாசீதசுரம்பறந்துவோடக்கட்டடா பாஷாணவுண்டைமார்க்கம், நாட்டினார்கெவுரியொன்றுவெள்ளையொன்று மலமாகச்சுண்ணாம்புக் குள்ளேவைபே

வைத்துநீபொதிந்தவேளை விளக்காய்போல வஸ்திரத்திற்பொதிந்துசுத்திச்சுட்டுநன்றாய், மெய்த்துநீகரிபோக்கிப்பாஷாணமெல்லாமுறையோட்டியெடுத்துமைந்தா சூதமொன்று, மைந்துநீமுறியதனைமத்தஞ்சாற்றில் மைந்தனேசேர்வகை சாமமொன்று, எய்த்துநீபின்பதனில்வாளமொன்று மியலானதிப்பிலிதானொன்றுகூட்டே, (௩௭௭)

கூட்டியேமைபோலே யாட்டிக்கொண்டு கூருகிறேன்சிறுபயிறு போலேகாட்டி, நாட்டியேயுலர்த்திபின்பு குளிர்காய்ச்சல்தனக்குநலமாகவொருவுண்டை வெந்நீரிலூட்டு, நீட்டியேமூலைப்பாலி லுண்டையூட்டநெறியில்லாச்சுரமெல்லாம் நெகிழ்ந்துமாகும், பூட்டியேபத்தியங் கேள்பாலுஞ்சோறும் பூர்த்தியாயுண்டுவரப் பொறுக்குந்தானே,

### பறங்கிச்சூலைக்கு மூலிகைப்பிரயோகம்

தானென்றபறங்கிமுதற்சூலைபோகச் சாதகமாய்மூலிகையிற்சாற்றக்கேளு, வேனென்றபேய்ப்புடோல்கொடிவேலிவேரும் வெள்ளா

ட்டுப்பாலிஞலாட்டிவாங்கி, தேனென்றசிறுமுள்ளி போலுருட்டிதி னமூன்றிலாவின்பா லுண்ணப்போகும், வானென்றவெள்ளாட்டுப் பாலுமாடி மைந்தனேபாலுஞ்சோறுண்ணக்கேளே, (ருஎசு)

மண்டைசூலைக்கு

கேளப்பாமருந்துண்டமூன்றுநாளும் கெடியானசலத்திலேயிரு க்கச்சொல்லு, வாளப்பாபுளியுப்பைமாற்றவேணும் வாங்காதசூலைக் குவயணங்கேளு, தாளப்பாவிவையொன்றுசம்பிரதாயம் சாதகமாய்ச் சொல்லுகிறேன் சமர்த்தாய்கேளு. நாளப்பாயிரதமொருபணந்தான் தூக்கிநலமானகெவுரியொருபணந்தான்தூக்கி, நீளப்பாகடுக்காயுமெ ட்டுவாங்கு நேரானபொதிப்பட்டைகழஞ்சியஞ்சே. (ருஅ0)

அஞ்சானவள்ளித்தோல் கழஞ்சிகால்தானப்பனே யிவைசோத் துளாயாட்டி,தஞ்சானவெல்லமதில்ரோய்க்கூட்டிச் சாதகமாயுரலி லிட்டுத்தூளாயாட்டி, மிஞ்சாமல்நாழிகைதான்முப்பதாகுல் மேலி யெல்லாம்வாரியே சுண்டைக்காய்போல், கஞ்சாணகுளிகைகட்டிநிழ லுலர்த்தி கரகத்தில்வைத்தங்கே மூடுமூடே. (ருஅக)

மூடியதோர்குளிகையிலே யஞ்சுவாங்கி முறையாகமூன்றுநாள் பதனஞ்சூட்டு,நாடியதோர்புளியுப்பைத்தவிர்க்கச்சொல்லுநயமானவ யிற்றிலேதக்கித்தாகுல், நீடினதோர்நெய்பாலும்வெல்லங்கூட்டி நே ரானபருத்தியிலேச் சாறுங்கூட, ஊடணதோருள்ளுக்குக் கொடுக்கத் தீருமுற்றமண்டைச் சூலைக்கிங்குரைக்கிறேனே, (ருஅஉ)

உரைக்கிறேன்துளசியிலைசரிப்பான்மேனி யுயர்தாளியிலைக்காட் டுக்கொஞ்சிதானும், நிறைக்கிறேனிவையெல்லாநிழலுலர்த்தி நோராக த்தூளாகவிடித்துப்பின்பு. துரைக்கிறேன் சூதமொன்றுகழஞ்சிவாங் கி சொல்லுகிறேன்வெற்றிலையால் மூறித்துக்கொண்டு,உரைக்கிறேன் பொடியுடனேகூடச்சேர்த்து மைந்தனேபகல்முழுது மிடித்திடாயே

இடித்ததொருமருந்ததனைவடிதான்கட்டி யியல்பாகப்புதுகலச த்திட்டுக்கொண்டு, மடித்ததொருபொடியிலே வெருகடிதான்தூக்கி வாகாகச்சலம்விட்டுக் குழைத்துருட்டி, பொடித்ததொருகுளிகைமூ ன்றுகவுண்ணப்போகுமப்பா தலைச்சூலைபுண்கள்தானுங், கடித்ததொ ருபிணியதிகமாயிற்றென்றால் கலந்துண்ணவனுபானங்கட்டக்கேளே

காட்டானபூசினிக்காய்பொழமாதல கடுவிழிச்சாறுதல்பகலிலா தல், மட்டானவெல்லமிட்டுக் கொள்ளத்தீரும்மண்டைநோய்சூலைமு தற்கரப்பான்போகும், திட்டானசன்னிக்குக் கொழம்சொல்வோம்சி றுவழுதலையின்வேர்கழஞ்சிநாலு, தொட்டானசுக்கிரண்டு சிந்திரண்டு துவளவிடித் திருநாழிநீரில்போடே, (ருஅ௩

சன்னிகியாழம்,

போட்டதனையெட்டொன்றாய்க் குறுக்கிக்கொள்ளப் புகழானச ன்னியெல்லாமுறிந்துபோகும், நாட்டமுடனிருமலுக்குக் கியாழஞ் சொல்வோம் நலமானமுத்தங்காய்கழஞ்சுநாலு, நீட்டதனைப்பேய்ப்பு டலுங்கழஞ்சுநாலு நேரானபற்படகங்கழஞ்சிரண்டு, மூட்டதனைச்சீந் திரண்டுசுக்கிரண்டு முன்போலேயிருநாழி நீரிற்போடே. (௫௮௬)

நீரிலிட்டுஎட்டொன்றாய்க் குறுக்கிவாங்கி நேராகக்காசளவுநாக் குதாடி, நீரிலிட்டுக்கொண்டவுடன்பேதியாகும் நீரானமோருண்ணப் பேதிநிற்கும், நீரிலிட்டவாய்வுமுத விருமல்போகும் நேரானவேர்க் கொம்புந்திப்பிலியுங்கூட, நீரிலிடக்கரிப்பானுஞ்சமூலம்வாங்கி நேரா னசங்கம்வேர் தோடைவேரே, (௫௮௭)

தோடையுடன்தேள்கொடுக்கி சிறுதேக்குதானும் செப்பமுடனி ருநாழிநீரில்போட்டு, ஏடையுடனெட்டொன்றாய்க் குறுக்கிவாங்கிப் டுபொடியுந்திப்பிலியுமூலமாட்டி, ஆடையுடன்கியாழத்தைக் கொண் டபோது அலத்திருமல்விட்டோடுமப்பாகேளு, சாடையுடன்சேர்த்த மேற்கியாழஞ்சொல்வேன் சாதகமாயிலவங்கமேலந்தானே. (௫௮௮)

தானென்றசெஞ்சந்தநம்பூலாவிருட்சம்சாதகமாய்ப்பூலாவேர்நீர் த்தாளிவித்து, மானென்றவிலைவயெல்லாஞ் சமன்தூளாட்டி மைந்த னேயாழாக்கு அளந்துகொண்டு, வூனென்றஆவினெய்யு மாழாக்குங் கூட்டியுறவுசெய்து சத்தெடுத்துஉண்டபோது, தேனென்றகுழம்பெ டுத்துநக்கிறைக்கால தீராதவிருமலெல்லாந் தீருந்தானே. (௫௮௯)

தீருமேகிரிச்சினங்களாறுமென்றால் செப்புகிறேன்கியாழத்தை த்திறமாய்க்கேளு, தாருமேகாணச்சாற்கொடுப்பைச்சாறு சாதகமாய் வெந்தசாறாகவாங்கி, தேருமேயிவையிரண்டுஞ் சமனாய்க்கூட்டித்திற மாகக்கால்படிநீருண்ணச்சொல்லு, தூருமேகல்தெரிக்கும் சலதாரை யாகுந்தூர்த்திடா தசையடைப்புக்கியம்புவேனே. (௫௯௰)

தசையடைப்புக்கு,

இயம்புவேனிந்நீரில்காரஞ்சேர்க்கவிசைவானதசைதெரிக்குமின் னங்கேளு, இயம்புவேன்கட்டிரத்தமுறிந்துவீழ மிறங்குமென்றநீர்த் தாரைக்கிடருந்தீரு, மியம்புவேன்கியாழமொன்று சிறுதேக்குமிளகு எரிசங்கம்வேர்சுக்கு கரிப்பான்பத்திரி, இயம்புவேன்தோடைவேர் கொம்மட்டிவேருமிவையொன்றுக் கிருகழஞ்சியிருநாழிநீரே, (௫௯௧)

நீர்தனையுழக்காக்கிக்குறுக்கிக்கொள்ள நெத்தடைப்புச்சலவடை ப்புநீரடைப்புத்தீரும், வாரதனைக்கிரிச்சினங்களாறுந்தீரு மற்றொருநு

தர்க்கின்றூலைவழங்கிடாதே, போரதனைச்செய்யாதே வாயாடாதேபொய்சொல்லிப்புலையாடித் திரிந்திடாதே, சீரதனையறியாரைச் சேர்ந்திடாதேசிஷவர்க்கமறிந்துகொண்டு தீட்சைசொல்லு, பேரதனையறிந்துவாகடத்தைக்காட்டு பிதற்றினால்வாய்மேலே போடுபோடே. (ருகூ௩)

போட்டவுடன்வணங்கினால் கருவைச்சொல்லு பொய்க்குறிசொல்பண்டிதனைப்போலாகாது, நீட்டமுடன்துணிந்தவர்கள் போலவம்பாநெறிநிற்கப்பாவமில்லை யில்லாவிட்டால், நாட்டமுடன்பலயழிகள் சுமதியாகும் நலமறிந்துசொல்வதற்குத்தோஷமில்லை, கூட்டவுடனொன்றானபெண்ணைப்போலே கூடுமப்பாசிஷவர்க்கங் கூடுந்தானே,

இரசசூலைக்கு

கூடிநின்றசரீரத்தில்ரசசூலைமுறிக்கக் கூடுகிறசுரைக்குடுக்கைக்கரியைவாங்கி, நீடிநின்றபழமோரில் கரைத்துக்கொள்ள நீங்காதரசங்கமூன்றுநீராய்ப்போகும், நாடிநின்றரத்தபித்தம் போகவென்றால்நற்குன்றிவெட்பாலாமருக்காரைவேரும், ஓடிநின்றமொசுமொசுக்கைசிறுகிளாவேறு முப்பிலிவேருடன் திருநாப்பாலைவேரே. (ருகூ௪)

சுராங்குசம்.

பாலையுடன்மிளகு கடுகொன்றாய்க்கூட்டிப் பரிவாகவாட்டுநெய்யிலெண்ணெய்விட்டு, ஆலையுடனடுப்பேற்றியெரித்துவாங்கு அப்பனேரத்தபித்தமனைத்தும்போகு, மாலையுடன்சுராங்குசத்தைச் சொல்லக்கேளு வளர்சூதமவிழிகஞ்சா வசுவாசிநோராய், சோலையுடன்தூதனையின்சாற்றாலாட்டித் துவரைபோல்குளிகைகட்டி வைத்திடாயே,

வைத்ததொருகுளிகையொன்று யிஞ்சிச்சாற்றில் மைந்தனேகுளிர்மாறல்வெண்சுரம்போம், வைத்ததொருகிரிச்சனத்துக் கின்னஞ்சொல்வேன்மண்ணில்வளர்பூநாகமெலுமிச்சங்காயளவு, வைத்ததொருபாலிலேகரைத்துக்கொள்ள மகத்தானகல்லடைப்புத் தெறித்துப்போகும், வைத்ததொருமுசுட்டையிலை பாக்களவரைத்து மருவியதோரெண்ணெயிலே கொடுத்திடாயே. (ருகூரு)

கிரிச்சனங்கட்கு.

கொடுத்திடவேநீரடைப்புத் தீருங்கண்டாய் கூறுகிறேன்கொள்ளுஞ்சார்வாங்கிக்கொண்டு, கொடுத்திடவேயரிசியிட்டுக் கஞ்சிகாய்ச்சிக்கொடுத்தவுடன் நீர்சிறுப்புக்குணமாய்க்காணும், கொடுத்திடவேமாவிலிங்கவடவேரொன்று கூறானநெரிஞ்சிவேர் பேராமுட்டிவேரும், கொடுத்திடவேசிறுபூளைவேருங்கூடகூட்டியொன்றாய் நீரிலிட்டெட்டொன்றாய்க்காய்ச்சே, (ருகூஎ)

காய்ச்சிவடித்துண்டிடவே பாறைமுதல்நழுவும் கல்தெறிப்புநீர்க்கடுப்புகரைய வென்றால், காய்ச்சிவடுத்திருந்த பழங்கஞ்சிக்குள்ளேகடுநெல்லி முளளியொருபலந்தானிட்டுக், காய்ச்சுநறுந்தாழையி

டவிழுதுச்சாறும் கலந்தரைத்துஎட்டுநாளுண்ணக்கேளு, காய்ச்சலறு நீர்க்கடுப்புமடைப்புதீரும் கடுமெபுழுகுபணவிடைதான்தூக்குதூக்கே

தூக்கியிளவெந்நீரில்போட்டுக்கொள்ளத் துளிவிழுதல்பொசித்தூறல்துறந்துபோகும், தாக்கியேயிருமலமூ மடைந்ததாறுற்சாற்றுகிறேனிருமலத்தின்தாரைதன்னை, தேக்கியேதிருக்கள்ளிப் பாலாழாக்கு சிற்றாமணக்கெண்ணெ யாழாக்கப்பா, தோக்கியேஆவினெய்தான்படியாழாக்கு சோராமல்பாண்டத்தி லூற்றுவூற்றே. (௫௯௯)

ஊற்றியேநிலைப்பனைவேர் வெள்ளையுள்ளி யுத்தமனைபெருங்காயமஞ்சளோடு, நேத்தியேயொவ்வொன்று அரைப்பலமாயாட்டி லேகித்துப்பதமாகவடித்துநீயும், மாற்றியேரண்டுகாசிடைதானக்க வப்பனைமலதாரை திறக்கும்பின்னும், போற்றியேபால்கஞ்சி கொள்ளவேணும்பொழுதுபுகில் பருப்பிட்டுக்கஞ்சிவையே. (௬௱)

நீரடைப்புக்கு,

கஞ்சிகொள்ளநீரடைப்பு வெளியாய்ப்போகும் காட்டாதேயிந்நூலைக்கள்ளர்கையில், அஞ்சியேநடப்பவர்போல் கிரகிக்குமட்டுமடிதொழுவார்நூல்கிட்டி லகந்தைசெய்வார், மிஞ்சியேயெழுநாகிலுடையோரப்பா வெறும்வீணரவர்க்கொன்றும் விள்ளவேண்டாம், பஞ்சியேபோவென்றுதள்ளிவிட்டுப் பாரப்பாபராபரத்தைப் பற்றிப்பாரே,

நீர்ச்சுரப்புக்கு,

பாரப்பாவிப்படியேகஞ்சிகொண்டு பத்திரமாய் மறுநாளைக்கண்ணமுண்ணில், நேரப்பாநீரோடுமின்னமொன்று நிகழ்த்துவேநீருள்ளியிந்துவோடு, தாரப்பாபழம்புளியும் சமனாய்க்கூட்டிச் சாதகமாயறுதிங்கள்சென்றகாடி, வாறப்பாகலக்கிநீயுண்ணச்சொல்லு மருவியதோர்பத்தியத்தை வழங்குவேனே. (௬௱௨)

வழங்கியதோர்பச்சரிசி பயறுஞ்சமனாய் மைந்தனேபால்கஞ்சிகுடிக்கச்சொல்லு, விளங்கியதோர்வெண்சாவல் குடலீரலடைத்துவெண்பசுவின்பாலிலே கொள்ளப்போகும், புழுங்கியதோர்வாய்பேசாதுண்மைவேணும் பூட்டக்கேள்நறுந்தாளிச்சாறுவாங்கி, அழகியதோர்குறுவைநெல்லரிசிகூட்டி யாட்டியேவெல்லமொடு ஆட்டுநெய்யே,

கல்லடைப்புக்கு.

நெய்விட்டுக்கிளறியேதின்னும்போது நோகக்கல்லடைப்புவீக்கநீங்கும், நெய்விட்டுப்பலகறையின் சாம்பல்வாங்கி நிம்பச்சாற்குழப்பியுண்ணில்நீர்தாரையாகும், நெய்விட்டுஆவின்பால் சங்கங்குப்பி நோகவுண்டிடவே சிறுப்புவாங்கும், நெய்விட்டுஆட்டுத்தாம்பொட்டிதன்னை நோனதண்டிலே பொதியப்போடே, (௬௱௪)

வல்லாரைச்சூரணம்,

போட்டங்கேகழுத்தளவு சலத்தில்நிற்கப்போகாத கல்லடைப்பு புழுங்கிவீழும், நீட்டக்கேள்புனல்முருங்கை நன்னாரிவேரும்நேரான ஆவரைவேரமுக்குறுவேர், நாட்டக்கேளுத்தமதாளிவேரும் நலமாக வாட்டியே விளக்கெண்ணெய்குத்தி, பூட்டக்கேள்குழப்பி நக்கவீக் கந்தூக்கம் பொருமலொடுகல்லடைப்பு புகழ்ந்துபோமே, (சுாரு)

போமப்பாஜாவாலிமனோசிலையும்நோய்ப்புகழ்மேனிச்சாற்றிலு ண்ணப்பொழியுநீர்தான், வாமப்பாசின்னிச்சார் நாவல்பட்டைவள மாகவதின்கொட்டைப் பருப்புங்கூட, வேமப்பாசமபாகமனைத்துவா ங்கிவெள்ளாட்டின்பாலிலே யுண்ணப்போகும், ஆமப்பாவல்லாரைச் சூரணங்கேளு அப்பனேமேகமென்ற தனைத்தும்போமே, (சுாசு)

அனைத்தும்போம்வல்லாரைச்சமூலம்வாங்கி அப்பனேநிழலுலர் த்திச்சூரணித்து, அனைத்தும்போம்நெய்யிலுண்ணமேகமெல்லாமாச் சரியம்நிலக்குமிழ்வேரிடத்துநின்றாய், அனைததும்போம்நீரிலிட்டெ ட்டொன்றாய்க்கொள்ள அடைத்திருந்த பல்லுவிழுமப்பாகேளு, அ னைத்தும்போம்நாய்ப்பாகல் நத்தைச்சூரி யடைவுகருஞ்சீரகமுஞ் சல த்திற்கூட்டே, (சுாஎ)

கூட்டியேயெட்டொன்றாய்க் கொள்ளக்கேளு கூட்டோடேகல் தெறித்துக்குமுறிவீழும், நாட்டியேமூன்றுதினமுண்ணத்தீரும் நல மானகொடுப்பைச்சார் நொச்சிச்சாறு, மூட்டியேவகைக்குழக்குக்கல ந்துகொள்ள உடன்தீருங்கல்லடைப்புச் சதையடைப்பு, நீட்டியேபிர மேகமிரண்டுபத்தும்போகவிகழ்த்துகிறேன் மகாமேககுடோரிதானே

மகாமேகக்குடோரி.

தானென்றகாரீயமிலுப்பைநெய்யில் தனித்தனியேழுதரமுருக்கி ச்சாய்க்கத், தானென்றகண்டங்கத்திரியின்சாற்றில்சாதகமாயெடுத்தத னைச்சட்டியிலிட்டுத், தானென்றநாயுருவிசிவந்ததாக சட்டிக்குளிட்டு நீவறுக்கும்போது, தானென்றகாண்டிகொண்டு கிண்டிகிண்டி சாசு மாய்ச்செந்தூரமானபின்பு, தானென்றசெந்தூரங் குழலிலிட்டுச்சா ப்பிட்டால்மேகாதி குடோரிதானே, (சுாசு)

குடோரியென்றசெந்தூரபற்பந்தன்னைக் கூறக்கேள்பணமூன்று நெய்யில்கொள்ள, குடோரியென்றசுக்கிலத்தில் மேகம்போகும்கூறு னதேனிலிடச்சலமேகம்போம், குடோரியென்றகிழ்க்காயில் சாற்றி லூட்ட கொத்தோடே சுரோணிதமேகந்தீரும், குடோரியென்றரத்த மேகத்தைப்போக்கும் குறுவாழைத்தண்டுநீர்தன்னிலூட்டே (சுாய)

ஊட்டடாசிறுபூளைச்சாற்றில்நீயு முத்தமனேகல்லெரிப்புத்திருந் தீரும், நாட்டடாவிஞ்சிச்சாற்சீதசுரம்போகும் நலமானமேனிச்சாற் தன்னிலூட்ட, வாட்டடாவறுசன்னிவாதம்போகு மைந்தனேவெற் றிலைச்சாற்கிராம்புகூட்டி, நீட்டடாபித்தசுரம்வெருவியோடும் நேருற் றதாபசுரந்தனக்குக்கேளே. (சுகக)

கேளப்பாஇளநீரைச்செதுக்கிவந்து கெடியாகநீரிலிடு பித்தசுரம் போகும், வாளப்பாபழச்சாற்றிலூட்டுலூட்டு வாகாகநீரிழிவுபோகவெ ன்றால், வேளப்பாவபினியொடு விளாம்பிசினும்நோய்விரவுவாய்தே னிலேபொடிதான்ரண்டு, நாளப்பாவேழுதினமுண்ணத்தீரும் நலமா னகிரிச்சினங்கள்போகத்தானே. (சுகஉ)

கிரிச்சினங்கள்போகவென்றால் முசுட்டைவித்துகெடியாகநெரு ஞ்சிவித்தாவாரைவித்து, கிரிச்சினங்கள்போகவே வகைக்குமுகக்குக் கெடியாகவிளாம்பிசினும் கழஞ்சியெட்டு, கிரிச்சினங்கள்போகவேய பினிநாலு கேளப்பாயுலர்த்திநன்றாய்த் தூளாயாட்டி, கிரிச்சினங்கள் போகவேவெருகடிதான்தேனில் கெடியாகச்செந்தூரம்பொன் பிடி தான்போடே. (சுகஙு)

நீரிழிவுக்கெண்ணெய்.

போட்டிடுவாயட்டதினம் நீரிழிவுதீரும் புகழானநீரிழிவுக்கெண் ணெய்கேளு, நாட்டிடுவாய்சூதமொருகழஞ்சிபத்து நலமானகெந்தக மூங்கழஞ்சிபத்து, ஆட்டிடுவாய்வெற்றிலையை யிதற்கிசட்டியப்பனே பேழைபோற்குகைதான்கட்டி, நீட்டிடுவாய்குகைக்குள்ளேகெந்திரு தம்நேராகவைத்துநீ மூடுமூடே. (சுகச)

மூட்டியேகுகைகட்டிவெற்றிலையையிட்டு முழங்கவேயிருநூறு பாத்திகட்டி, நாட்டியேபொதிந்துகட்டியதின்மேல்கேளு நலமானவா ழையிலையிருநூறுபொதிந்து, நீட்டியேபிளவைகட்டு சுத்திவைத்து நெருக்கிநார்கட்டியொரு குழிகெல்லிநீயும், ஊட்டியேகுழிக்குளளே புளிப்புரோணியுத்தமனே யிரஞ்சுமரக்கால்கொட்டே. (சுகரு)

கொட்டியேயதின்மேலே யிலைபொதியவைத்து குவித்திடாயதி ன்மேலேசிராப்புரோணி, கொட்டியேயனலிட்டுவெந்துநிற்கும் குவி யநீதெரியாமல்மண்ணைமூடி, கொட்டியேமூன்றுதினங் கழிந்தபின்பு கூட்டடாமருந்தெடுத்துக் கல்வத்திட்டு, கொட்டியேதூளாக்கிகுழவி யிட்டுகூறக்கேள் செந்தூரங்குணத்தைக்கேளே, (சுகசு)

குணங்கேளுமதுமேகம் பித்தமேகம் கூறுனவாயுவுடன்கொடிய மேகம், சினங்கேளுவுண்டவுட னிறந்துபோகும்செய்பவுறுகிரிச்சின ந்தான்றீரக்கேளு,மணங்கேளுமந்திதோலாவாரந்தோலுமைந்தனே வொதியமரம்பட்டைநாலும், கணங்கேளுசமமாக முலர்த்திநீயும்தரி க்கநன்றாய்பொடியாக்கித் தேனிற்கொள்ளே. (சுகஎ)

நீரிறங்க.

கொள்ளக்கேள்கிரிச்சினங்கள் போகும்போகும் கூ ணமன் றிநீரி றங்கக்கேளுகேளு, விள்ளக்கேள்மாம்பட்டை யாவரையின்பட்டை வெள்வேல்தோல் வேப்பந்தோலிவைதானேராய், அள்ளக்கேளிடி.ந் துவொருபாண்டத்திட்டு அப்பனேசலம்விட்டுவூறவைத்து, துள்ளக் கேள்குறுக்கினமுழக்கருந்த துயர்தீருமேகாதிசூரணத்தைப்பாரே.

மேகாதிசூரணம்.

பாரப்பாமுந்திரிகை பேரீச்சம்பழமும் பருநெல்லியதிமதுரமே லங்கல்நார், நேரப்பாதிப்பிலியுஞ்சிறுபூளைவேரும் நேரானசங்கனமு ங்கொத்தமல்லி, வேரப்பாவெள்ளரியின்வித்துங்கூட்ட மீருமல்சம பாகஞ்சூணியத்துவாரப்பாவெருகடிதான்கழுநீரிற்கொள்ளமைந்தனே கடுப்பெரிவுகிரிச்சினங்கள்தீரும், ஆரப்பாவறிந்துசெய்வோர் சித்தர் முத்தரப்பனே மற்றோர்க்குத்தெரிந்திடாதே. (௲௧௧)

வங்கபற்பம்,

தெரிந்திடவேகுன்மங்கள்சிதறியோடச்செப்புவேன்வங்கபற்பந் திறமாய்க்கேளு, அரிந்திடாய்த்தகடுகொண்டு வங்கந்தன்னையப்பனே சட்டியொன்றிலனைவாசியுப்பை, சொரிந்திடாயதன்மேலேதகடுவை த்துச் சோரவந்தச்சட்டிரம்பவுப்புமிட்டு,வருந்திடாமேல்சட்டிகவிழ் த்துமூடி மைந்தனேநாற்சாமமெரித்திடாயே. (௲௧௰)

எரிந்தாறியெடுத்துப்பார்வங்கபற்ப மென்மகனே ரண்டுபணந்த ன்னைவாங்கி, யெரிந்தாமுச்சர்க்கரையில் குழப்பியுண்ண எட்டுவகை குன்மங்களெல்லாந்தீரு, மெரிந்தாருநோய்க்கெல்லா மிப்படியேயிட் டுஇட்டுவரவங்கபற்ப மின்னங்கேளு, எரிந்தாறுநோயனைத்துமுநிரு மிந்தவியல்புகேளதில்கண்ணி யிடுங்கிடாயே. (௲௨௩)

பிடுங்கியொருசட்டியிலேகழுவிக்கொண்டு போரகத்தாழிக்குள் பாதியிட்டு, நெடுங்கியேயிரண்டுபலம் வங்கம்வைத்து நோரகவதின் மேலுமதில்கண்ணியிட்டு, நடுங்கியதோர்சட்டியிறாற் கவிழ்த்துமூடி ராப்பகலாயெண் சாமமுத்தீயிட்டு, மடுங்கியேயாறவிட்டெடுத்துப்பா ருமைந்தனேவங்கமது பற்பமாமே. (௲௨௨)

ஆமப்பாபற்பத்தில்பணந்தானென்று ஆவினெய்யிற்கொண்டிட வேதீருநோய்கே, ளோமப்பாவெலுமபுருக்கிவெள்ளைவீழ்த லுடல்கா ந்தல்கடுப்பு கிரிச்சினங்கள்தீரும், வேமப்பாசலக்கழிச்சல் காமாலை பாண்டு வெகுகனலில்பஞ்சுபோல் வேகும்வேகும், நாமப்பாமருந்தெ ல்லாமுள்ளபடிசொன்னோம் நாதாக்களிக்கருவை மறைத்திட்டாரே

அப்பிரகசெந்தூரம்.

மறைபோற்றுமப்பிரக செந்தூரத்தை வயணமாய்ச்சொல்லுகி றேன்மச்சகேந்திரா, நிறைபோற்றுமப்பிரகமிடித்துவாங்கி, நேரப்பா பாண்டத்திலிட்டுநீயும், கறைபோலுங்கலசத்திலரசுஅத்தி நலமான ஆலம்பட்டையிவைகள்நேராய், குறைபோக்கியிடித்துநீ சலமும்விட் டுக்குமட்டியே கழுவியதையூறவையே (௯௨௪)

ஊரியதோர்நீர்பிழிந்துஅப்பிரகமாட்டியுத்தமனேயெருக்கிலையை ப்பாத்திநன்றாய், மீறியதோரடைவைத்து வுலர்ந்தபின்பு வீதியிலே யெருக்கவித்து அடையைவைத்து, மாறியதோரடைமேலேயெருவுங் கொட்டி மைந்தனேவறகாலிப் புடத்தைப்போடு, தேறியதோரப்படி யேயிருபத்தொன்று தரத்திலேயப்பிரகஞ்செந்தூரமாமே. (௯௨௫)

செந்தூரமெடுத்துநீசலத்திற்போட சீக்கிரத்தில்தளர்ந்துபோ மிதந்திடாது, செந்தூரம்பணவிடைதான் தேனில்கொள்ள தீராதநீரி ழிவுதீருந்தீரும், செந்தூரமுண்டிடவேகிரிச்சினங்கள் செப்பரியக்ஷய ந்தீருங்குன்மந்தீரும், செந்தூரமுண்டிடநோயெல்லாந்தீரும் சிவசி வாவப்பிரகந்தெளிந்தபேர்க்கே, (௯௨௬)

பிரமேகத்துக்கு

போக்கானபிரமேகமொழியக்கேளுபூட்டுவேனீருள்ளிபழச்சார் வெல்லம், தாக்கானசமபாகம்பனியில்வைத்து தான்பிழிந்துசாப்பிட வேதணிந்துபோகும், தேக்கானவப்பிரக மின்னஞ்சொல்வேன் திரு மாலினப்பிரமிமெடுத்துவந்து, வாக்கானவெள்ளாட்டு நீரில்வெந்து மைந்தனேமறுபடியு மாட்டக்கேளே. (௯௨௭)

மாட்டக்கேள்சுண்ணாம்பு தண்ணீர்க்குள்ளே வாகானகோனீரில் வித்துக்கொண்டு, நாட்டக்கேள்சலம்விட்டு கழுவிப்போட்டு நன்றாக விதழிதழாயெடுத்துக்கொண்டு, பூட்டப்பாபுதுசீலைக்குள்ளேவைத்து புகழாகப்பருநெல்லுங் கூடக்கூட்டி, மூட்டக்கேள்கிழிகட்டி சட்டியி ட்டுமுத்துப்போல் தெளிக்காட்டிமட்டாய்வாரே, (௯௨௮)

வார்த்துநன்றாய்பிசைந்திடவப்பிரகம்கரைந்து மண்டிபோல்கீழ் நிற்குந்தெளிந்திறுத்து, வார்த்துநன்றாயுலர்ந்தபின்பு ஆலம்பாலும்வ ளாராலம்விழுதுமதின்மிகுழுங்கூட, வார்த்துநன்றாய்மயனம்போலாட் டிவாங்கி மைந்தனேபின்னமுங்கேள் நினைவாய்நீதான், வார்த்துநன் றாயாலிலையில் பழுப்புவாங்கி மடக்கொன்றில்மருந்தப்பி மடக்கால் மூடே. (௯௨௯)

மூடியேசீலைசெய்து மண்ணுஞ்செய்து மூசியாதே கசபுடத்திற் போட்டுவாங்கு, நாடியேமூன்றுதர மிரட்டையிலேயிட்டு நயமாகவா றுதரமிப்படியேபோடு, நீடியேகற்றாழைச்சாற்றாலாட்டி நேராகமூன்

றுதினம்புடத்தைப்போடு, தேடியேயோரிலேத் தாமரையின் சாற்றால் சிறக்கவேமூன்றுதரம் புடத்தைப்போடே. (௫௩௰)

போட்டதொருவப்பிரக மெடுத்துப்பின்னும் பொரவெள்ளையாட்டுநீர்தன்னிலிட்டு, மூட்டதொருகையாலேபிசைந்துநீயு முழங்கவே கொடுப்பைதனைச் சமூலம்வாங்கி, கூட்டதொருகுறுக்கரிக்குசட்டியிலிட்டுக்குறையன்றி முச்சாமமெரிக்கப்பற்பம், தீட்டதொருநாவல் தோலத்தித்தோலும் சிறப்பானவரசந்தோலத்தித்தோலே. (௫௩௧)

தோல்சமனாய்ப்பொருக்கெல்லாஞ் சீவிப்போட்டுத்தூண்டுதூண்டாய்நலுக்கியேசன்னமாட்டித், தோல்சமனாய்நாற்குறுணிநீரில்போட்டுச்சுழலவேயாறியபின்றலொன்றாக்கித், தோல்சமனாய்வெந்தசலம் அப்பிரகத்தூற்றித்தூளாட்டிவில்லைகட்டியுலரவைத்து, தோல்சமனாய்கசபுடந்தான்போடுபோடு சோறுபோல்கோலரக்குகியாழம்வையே

கோலரக்குக்கியாழத்தால் புடந்தான்பத்து குமட்டியேவெந்தபின்புசீனிவாழை, போலரக்குப்பழந்தேன்பால் நெய்யஞ்சுகம்நோய்ப்புகட்டியதிற்செந்தூரம் பிசைந்துவைத்து, காலரக்குச்சட்டியிட்டுஅடுப்பிலேற்றிக் கனகம்போல்பதம்வந்தா லாற்றிவைத்து, பாலரக்குப்பலமேதுசலந்தான்வற்றிப்பழமெல்லாங்காணமல்நெய்பதமாந்தானே

நெய்பதமாய்நிற்கையில்செந்தூரமாகும் நோரகவாறியபின்வைத்துநீயும், மெய்ப்பதமாயனுபானஞ்சுரத்துக்கெல்லாம் மிருமல்சீனியிலேயரைமாவூட்டு, செய்பதமாய்தாபசுரம் போகவென்றால்செப்புகிறேன்சுக்குத்தூள்பணந்தான்வாங்கி, கைபதமாய்ச்செந்தூர மரைமாவூட்டு கடுஞ்சுரங்கள்சன்னிக்கு முருங்கைத்தோலே. (௫௩௪)

முருங்கைத்தோல்கியாழத்தா லரைமாவூட்டு மூர்ச்சையறுந்தோஷசுரமனைத்துந்தீரும், முருங்கைத்தோல்பத்தியங்கேள் வெள்ளாட்டுப்பாலில் மொழிகுறுநொய்யிட்டங்கேகஞ்சிகாய்ச்சி, முருங்கைத்தோல்பனைவெல்லம்கழஞ்சியிட்டு மொலுமொலெனவேர்க்கவே கொடுக்கச்சொல்லு, முருங்கைத்தோலுதாத்தில் வியாதிக்கெல்லாம் மூன்றுநாள்தேனிலே குன்றியூட்டே (௫௩௫)

ஊட்டுவாயிரண்டுமாச்செந்தூரம்வாங்கி வுத்தநொய்ச்சிச்சாற்றிலிடுஅஷ்டகுன்மம்போகும், நாட்டுவாயுதாத்திற்கட்டிபோகநறுநெய்யைச்சேர்த்துநீயுண்ணச்சொல்லு, நீட்டுவாய்நீரிழிவுபோகவென்றால் கிறுத்தொருமாச்செந்தூரம் தேனிலிட்டு, மாட்டுவாய்காயாசுவாசம் போகமைந்தனே செந்தூரம்காணிபோடே (௫௩௬)

காணியிடுநெய்யிலேக்ஷயரோகம்போம் காயாசுவாசம்போம்வற ட்சிபோகும், கோணியிடுவலிகுன்மம்போகவென்றால் கொட்டா முருங்கைத்தோல்சாற்றினுள்ளே, பூணியிடுசத்திகுன்மம்நீங்கவென் றாலுத்தமனே சுக்குவெந்தசலத்திலுள்ளே, பேணியிடுசெந்தூரமிரு மாகீயும்போனரசபற்பம் கூட்டுகூட்டே. (சுருஎ)

கூட்டையிலேபேதிமெத்தவுண்டாச்சென்றால்; சுறுவேன்காந்த செந்தூரத்தோடு, ஊட்டையிலேசூதசெந்தூரந் தானுமோரொன்றுப ணத்துக்குமப்பிரகமதையா, நீட்டையிலேஅஷ்டகுன்மம்பறந்துபோ கும் ரோகபத்தியத்தைநீகேளப்பா, நாட்டையிலேபிரமகுலத்துநி த்தோராகில் நலமானதுவரைதுதுளங்காயாமே. (சுருஅ)

லோகசெந்தூரம்.

ஆமப்பாமரங்கிசந்தான்தின்றபேர்க்கு ஆட்டுவற்றல்முசல்கறியு ம்நீர்மோராகும், வேமப்பாவுடம்புமெத்த மெலிந்திருந்தால் வெண் ணெய்தின்னச் சொல்லுவாய்வேறுகேளு, சாமப்பாசலக்கழிச்சலனை த்தும்போகச் சாற்றுகிறேன்லோகமூதற் செந்தூரந்தன்னை, நாமப்பா கண்டபடிசுருக்கநகேளு நல்லபழச்சாற்றிலே பொடியைப்போடே,

போட்டதனைக்கழுவியோரவியிற்போட்டு புகழாகவுலர்ந்தபின்பு நாவல்பட்டை, யாட்டதனைப்பிழிந்திந்த அரைபொடியிறசேர்த்துஅ ப்பனே சுவமுமட்டும் ரவியிற்போட்டு, நாட்டதனைமூன்றுதரமிப்படி யேசெய்ய நலமானசெந்தூர மாகும்பாரு, கூட்டதனையாவரையின்வி தைத்தூளாட்டி கோதன்றிச்சில்லவடி கொண்டிடாயே, (சுசு0)

வடிகொண்டதூளதனில் விராகன்மூன்று மகத்தான செந்தூரம் பணந்தான்மூன்று, வடிகொண்டதேவிரெண்டு கியாழத்தாட்டுமைந் தனேகியாழத்தின் மருந்தைக்கேளு, வடிகொண்டகழல்மணியும் வெள்ளுள்ளிக்கடுக்காய் வசம்புகோடமுடனேசுக்கோடாதும், வடி கொண்டவெட்டொன்றாய்க் கொள்ளச்சொல்லு மைந்தனேகுரணகி யாழங்கேளே. (சுசுக)

கேளப்பாசலக்கழிச்ச லனைத்தும்போகும் கொடியானகடலிறஞ் சிப்பட்டைதானும், நாளப்பாபலமூன்றேமுக்கால் கும் நலமானஆவ ரைத்தோல் மூன்றேமுக்கால், நிளப்பாபலமஞ்சுகருங்காலிப்பட்டைநே ரஞ்சுபலங்கட்டுக்கொடிசமூலம், தாளப்பாகடுக்காய்தான் பலம்நாலா குந்தாணிக்காய் பதினஞ்சுதகர்த்துவாங்கே. (சுசுஉ)

தகர்த்திடுவாயிரண்டைதான் பலந்தானப்பாசாதிக்காயிவைசே ரத்தூளாயாட்டி, தகர்த்திடுவாயிருநாழிசலத்திற்காய்ச்சிசார்வாகவெ ட்டொன்றாய்குறுக்கினன்றாய், தகர்த்திடுவாயிரண்டுகுத்துச் சூரணத் தைச்சாப்பிட்டேவயிருகேர மசனமேலே, தகர்த்திடுமேசலக்கழிச்சல் மாறுமாமுந்தலைமுழுகத் தயிலமொன்றுசாற்றக்கேளே. (சுசுங)

செய்துயிருசாமமட்டும், தேங்கியந்தவெருவுக்கிச் சட்டிவைத்துறி ரும்பவொருமுழவயமெடுருவுக்கி, பாங்கியந்தவுளருட்டியெரித்து ஆறில்பார்மகனே செந்தூரம்பற்பமாமே. (௪௫௰)

பற்பமெத்துநாம்பிரத்தைத் தூளாயாட்டி பாச்சடாசமபாகம்து தங்கெந்தி, அற்பமென்றுநினையாதே செருப்படிசாறுவிட்டு ஆட்டியோ குகையிலிட்டு மண்ணுருச்செய்து, சிற்பமென்றுமூன்போலைப் புடத் தைப்போடு சிவசிவாயாறவிட்டெடுத்தப்பின்பு, சொற்பமென்றே ரொட்டிலொன்றுநாவிகூட்டி சோரமலநாவியொன்றுயிளகுகூட்டே

யிளகிட்டுக்கொடிவேலிபூலம்வாங்கி மூலாலிசியாமுத்திலாட்டு ஆட்டு, இளகிட்டுயிருசாமங்கழிந்தபின்பு யிதமாகக்குன்றியிடைக்கு ளிகைகட்டி, யிளகிட்டுகுகையிட்டு நெல்லுக்குள்வைத்துவொருதிங் கள்சென்றுமே வாங்கிமைந்தா, புளகிட்டநோய்க்கெல்லா மனுபானந் தன்னைப்பாடுகிறேன் பண்டிதரே பார்த்திடாயே. (௪௫௨.)

பார்த்திடவேதிப்பிலித்தூள் பணந்தானொன்று பாச்சாடபூபதி யாமுண்மையொன்று, சேர்த்திடவே பதின்மூன்று சன்னிபோகும் சேரிதந்துயிந்திச்சார்திறமானீயும், கார்த்திடவே கொடிவேலி யாமுத் தூட்டுகுஞ்சுருக்குப்படிநெட்டுகுலைபோகும், வேர்த்திடவே திரிகடு குதன்னிலூட்டு கொடுத்தவுடன்சாமனைத்துங் கூடிப்போமே.

கூடிப்போமஷ்டகுன்மந்தேனிலாட்டு குலாவியதோர்சயரோக ங்கூட்டிவிட்டோடும், பேசிப்போம்பவுத்திரமும் காப்பான்புண்ணும்பி ளவைருங்குத்துமூதல் பிலக்கெட்டோடு, மாசிப்போமூன்றுகின்றவி யாதியெல்லா மடியுடனேபோந்தோமப்பாகேளு, வாசிப்போமெ ன்றுவினைவாயிற்றென்றுல் மைந்தனேயிந்தநூல் வாசிப்பாயே. ()

கெந்தகதயிலம்.

வாசிக்குங்கெந்தகத்தின்தயிலம்வாங்க வகைகேளுபுலத்தியனே மச்சகேந்திரா, கேசிக்குங்கெந்தியொரு பலந்தான்மூன்று திருவிகற்ப குருமஞ்சலிங்கமூன்று, ஆசிக்குங்கெவுரிமூன்றுதாக்கு அரிதாரமொ ருமூன்றுயிலேதான்மூன்று, பூசிக்குமாயிமூதல் திருவாணிக்கும்புகழ கவாமத்திற்பூசிப்பாயே. (௪௫௩)

பூசித்துமஞ்சளிலேதயிலம்வாங்கி புகட்டிமேருநெல்லாமயன ம்போலே, பூசிட்டுயெட்டுநாளாட்டிவாங்கி புகழானபாணியிலேயாட் டிமைந்தா, பூசித்துப்பாணிக்குள் வளப்பக்கல்லால்பொருத்தியுடை த்தங்கேசக்குவாய்க்கு, பூசித்தக்கற்கண்ணைச்சேருங்கூட பொங்கியி ன்றவுரிக்கரியு மாட்டிவாங்கே. (௪௫௪)

வாங்கியதோர்மருந்துதனைச் சிலையிலூட்டி வாகாகச்சாந்துவரையடைத்துச்சுற்றி, வாங்கியதோர்மண்செய்துகச்சுமட்டும் வாகாகக்குழி வெட்டிப்பாதிமட்டும், வாங்கியதோராட்டெருவை யதிலேகொட்டிமணல்கொட்டி நெற்குழிபோல்வளைந்துபின்னும், வாங்கியதோர்பாளிதனையதன்மேல்வைத்து மைந்தனேயாறுதிங்களாட்டியங்கே. (௬௫௭)

ஆறுதிங்களானபின்புதிறந்துபார்க்க வப்பனேநீலநிறத்தயிலமாகும், வேறுவினையொன்றுமில்லை தயிலங்கொள்ள வேதாந்தத்தாயெனக்குவிரித்துச்சொன்னாள், மாறுவிதமணல்படாத் தயிலமாச்சுமகத்தானதயிலமது மரணமில்லை, யேறுவிதம்வியாதிகட்கு அனுபானந்தானென்மகனே மஞ்சள்சாறிடித்திடாயே. (௬௫௮)

மஞ்சள்சாறதிலூட்டமகோதரங்கள்தீரும் வளர்நிம்பச்சாற்றிலிடக்குலைநோவுதீரும், மிஞ்சாமல்வெருகம்வேர் தயிலம்வாங்கிவேவித்துக்கொடுத்திடவே குன்மந்தீரும், அஞ்சாமல்சீனிமேலேகொள்ளக்கொள்ள அம்பனேதாதுவெல்லா மமுர்தமூறும், துஞ்சாமல்சாதிக்காய்பத்திரியின்தூளின் துளியிரண்டுதேன்விட்டுத் தயிலமூட்டே. (௬௫௯)

ஊட்டியுண்ணத் தாதுவெல்லாம் பொறுத்துநிற்கு மூத்தமனே கொடிவேலித்தயிலத்தூட்டிக், கூட்டியுண்ணக்கடிவிஷங்கள்தீருந்தீரும்கொண்டசனஞ்செரியாட்டால்கடுகிலூட்டி, வாட்டிவிடும்பித்தமெல்லாந்தீரவென்றால் மைந்தனேவெறுநீசத்தண்ணீராகும், வீட்டில்வளர்சிறுகீரைவெந்ததண்ணீர் வேவித்துக்கொடுத்திடவேமேகம்போமே

மேகம்போமித்தயிலங்குடவனிமேலூட்ட மேவிநின்றகளிம்பற்றுச்சொர்ணமாகும், மேகம்போம்லோகங்கள் பொன்னுமாகும்வெள்ளிவங்கமிரும்புசெம்புபொன்னுமாகும், மேகம்போமிககருவைவெளிவிடாதே வேதையாங்காயசித்திநோயுந்தீரும். மேகம்போஞ்சூதசெந்தூரங்கேளு விபரமுடன்புலத்தியனே விரும்பிநீயே. (௬௬௧)

சூதசெந்தூரம்.

விரும்பிக்கேள்சூதமொன்றுகெந்திரண்டு மிருமல்கருந்துளசிநீராலாட்டி, விரும்பிக்கேளிரண்டுதினங்குப்பிக்கேற்றிவிபரமுடன்சீலைமண்தானேழுஞ்செய்து, விரும்பிக்கேள்குப்பியிட வாய்க்குத்தானும் வெண்ணுப்புப்பச்சைமண்ணு முப்புங்கூட்டி, விரும்பிக்கேளாட்டியதைவிரல்போல்திரித்துமேல்வாய்க்குளழுத்திநன்றாய் வைத்திடாயே.

வைத்திட்டஅடிகனத்தபாண்டத்தூடு மைந்தனேதமரிட்டுமணலைக்கொட்டி, வைத்திட்டுவிரல்கனந்தானலதாக வாகாகவதின்மேலே குப்பிவைத்து, வைத்திட்டகுப்பிக்குக் கழுத்துமட்டும்மணல்சொரி

ந்துசூட்டடுப்பில்வைத்துநீயும், வைத்திட்டமந்தாக்கினி தன்னைமூட்
டிமைந்தனே யிரண்டுபத்துசாமமாட்டே, (௯௯௩)

மாட்டடாகாடாக்கினிபத்துசாமம் வளமாகச்செந்தூரமாகும்பா
ருநீட்டடாஆறியபின் னிறக்கிப்பாரு நிறமிந்திரகோபம்போல் சிவப்பு
மாகும், மாட்டடாவித்தயில மிறக்கும்போது மாயிக்குப்பூசைநன்று
ய்வைத்துநீயும், மூட்டடாவனுபானத் துறையோடொக்கவொவ்வொ
ன்றுய்ச்சொல்லுகிறே மூணிக்கேளே, (௯௯௪)

கேளப்பா பொரிமாவில்செந்தூரம் பணந்தான் கெடியாகவுண்
டிடவேசத்திசுரம்போகும், நாளப்பாவுள்காய்ச்சல் போகவென்றுல்
நலமாகமூன்பொடியிலூட்டிவூட்டு, தாளப்பாசர்க்கரையில் தாபசுரம்
போகும்சயகாசந்திரவென்று விஞ்சிச்சாற்றில, வாளப்பாசாத்தியமா
ஞ்சுரங்களெல்லா மாறவென்றுல்நொச்சிச்சா றுள்ளேயூட்டே,

ஊட்டுவாய்வயிற்றிலேசீதம்வீழி லுத்தரிகசாம்பலிலேயூட்டுமை
ந்தா. நீட்டுவாயஷ்டகுன்மம்போகவென்றுல் நேரானகொடிவேலிக்கி
யாழத்தூட்டு, மூட்டுவாய்சன்னிவகையொழியவென்றுல்முத்தங்காய்
கியாழத்திலூட்டிவூட்டு, நாட்டுவாய்திரிதோஷமொழியவென்றுல் நல
மானதிசாமூலக் கியாழத்தூட்டே. (௯௯௫)

கியாழமிட்டுஅரோசிசுர மொழியவென்றுல் கடுஞ்சுக்குநெல்லு
மிவைசமன்வறுத்து, கியாழமிட்டுஇவையிரண்டு கூட்டியூட்டு கண்
கொண்டபவுத்திரங்கள் போகவென்றுல், கியாழமிட்டுஅமுக்கிறுக்கி
ழங்குவெந்து கன்னிகட்குக்கெற்பவிப்புருதியாறல், கியாழமிட்டுத்
தோடைநீர்தன்னில்நீயும் கரியாறுமிளாருநன்றுயணைத்திடாயே.

அணைத்ததொருமருந்ததனைச் செந்தூரஞ்சேர்த்து அருந்திடவே
பாண்டுவகையஞ்சுந்தீரும், இணைத்தநொருபதினெட்டுக் குட்டம்போ
கயேரண்டத்தயிலத்திலூட்டிவூட்ட, நினைத்ததொருஅருமூலம் போக
வென்றுல் நேர்கருணைச்சாறதனி லுண்ணப்போகும், பணைத்ததொரு
பத்திரண்டு மேகம்போகபருத்திவிணைத் தயிலத்தில்பாச்சுபாச்சே.

பாச்சப்பாகாதிரண்டுங்கேளாதென்றுல் பன்றிமுன்னைப்புங்கெ
ண்ணெய்கொண்டுஆட்டிப், பாச்சப்பாகாதுகளிலடைத்துக் காற்றுப
டாமலேபஞ்சுகொண்டு வடைத்துநன்றுய், பாச்சப்பாவீட்டிலேமஞ்
சியோரம்பாங்காகமூன்றுநா ளிருக்கக்கேட்கும், பாச்சப்பாவயித்திய
ங்களின்னமுண்டுபார்த்தெல்லாம் சுருக்கியிதில்பாடினேனே (௯௯௬)

செயகுலாந்தகன்

பாடுகிறேன்சிலேற்பனந்தான் தொண்ணூற்றாறும் பற்றறுக்கச் செயகுலாந்தகனைக்கேளு, போடுகிறேன்கடைசியிலே மைந்தாகேளு புகழுகிறேன்கடுஞ்சுரக்குப் புகழ்ந்துகாணும், நாடுகிறேனரிதாரம்ப லமதொன்று நலமானசலாசத்துப் பலமதொன்று, நீடுகிறேன்செம்ப ருத்திச்சாற்றில்நீயும் நேராகமூன்றுநாளாட்டிவாங்கே. (கூஎ0)

வாங்கியிதைக்குகையிலிட்டு மண்ணுஞ்செய்துமண்கனத்த சிறு காழிகொண்டுவந்து, வாங்கியேதமரிட்டுயணலைக்கொட்டி-மைந்தனே மணல்மேலேகுகையைவைத்து, வாங்கியேமணல்கொட்டி- சட்டிமூடி ஃகானவடுப்பிலேவைத்துநன்றாய், வாங்கியேயெழுதினம்தீபவன்னி மாட்டியேயாறவிட்டிறக்கிப்பாறே. (கூஎக)

பார்க்கையிலேதேவிக்குப்பூசை செய்துபார்க்களவிலே யிந்திர கோபம்போலாம், சேர்க்கையிலேபணவிடைதா நாகவல்லிச்சாற்றில் செலுத்திஞல்சயகாசந் தீருந்தீரும், வார்க்கையிலேதோடைச்சாருள் ளேயூட்டு மகத்தானவுளமாங்கை யெட்டுந்தீரும், தீர்த்திடவேசிலேற் பணவாதமாஞல் தென்னமட்டைச்சாற்றிலிடுதீர்ந்துபோமே. (கூஎ௨)

போமப்பாகாயசுவாச மாஞற்கேளு பொற்கடுக்காய்த் தூளிலிடு பொடியாய்ப்போகும், வேமப்பாசயகாசம்போகவென்றால்வெல்லமு டன்தேன்கூட்டிக்கொடுத்துவாநீ, ஆமப்பாசுரகாசந்தனக்குநீகே ளரு மையாய்கரிசாலச்சாற்றிலூட்டு, சாமப்பாவிவற்றாலேயெண்பத்தாறு சயமெல்லாமொழிந்துபோம் சாற்றக்கேளே. (கூஎ௩)

சாற்றுகிறேன்வாந்திவிக்கல்போகவென்றால் தயவாகவெண்ணெ யிலேகுழப்பியூட்டுச், சாற்றுகிறேன்செங்கழுநீர்ச் சாற்றிலூட்டுசர்வ சுரமனைத்தும்போஞ் சாத்தியமாகும், சாற்றுகிறேசுகிர்தந்தாக்குள்ளு மாகச் சார்வாகதீவினைக்குப் பிரகாசமாகச், சாற்றுகிறேனிப்படித்தா னிருந்தபேர்க்கு சகலசித்துமாடிடவே தாய்சொல்வாளே. (கூஎ௪)

சொல்லுகிறேன்தனித்திருந்தசரீரத்துள்ள துடக்கெல்லாமகற்றி நன்றாய்ச்சுத்திசெய்து, மல்லுகிறேன்நாற்கலையும் விடாமல்கட்டிமக த்தானபரவெளியை விழியால்நோக்கி, வெல்லுகிறேனிர்குணத்திலி ருந்துகொண்டு மேலானஆதிபிதா மென்தாள்போற்றி, கொல்லுகிறே னென்றுஅறுசமயம்விட்டுகொத்தோடேதிரோதாயி மாய்கைதள்ளே

தள்ளிவிட்டுப்பதியிலே யிருந்துகொண்டு சங்கற்பவிகற்பமெல் லாந்தகர்த்தேயோட்டி, தள்ளிவிட்டுசண்டாளர்நேசந்தன்னைசாதகமா ய்சுவாமிபதந்தன்னையேற்று, தள்ளிவிட்டுஅசாத்தியமாய்நோயுள்ளோ ர்க்குச் சற்குணமாய்புகழ்ந்தாக்கால் சாத்தியமாகும், தள்ளிவிட்டுச்சா த்தியமாம்நோயுள்ளோர்க்கு சண்டாளக்கோபம்வரில் நோய்தீராதே.

தீராததெய்வீகமருந்தையீந்து திருட்டுமனப்பாவியென்றால் செனனத்தோடு, தீராதுபோவதுவே பெரியோர்செய்கை செனனமென்றபெருங்கடல்தான் தெளிந்தபேர்க்கு, தீராதுசெபயோகி யானாற்கேளுதெப்பம்விட்டுக்கரை கடப்பானாறுகடல்தன்னை, தீராதுசூலினையுந்துடர்ச்சியாகித்திரிகைபோற்சக்கரம்போல் திரிவார்காணே. (கூளஎ)

திரிந்திட்டணண்டரண்டபதங்கள்தோறும் செப்பினதோர்சாஸ்திரங்களகோடாகோடி, திரிந்திட்டரிஷிகள்முதல் சித்தர்தேவர் செருட்டித்தநூலகளெல்லாந் திடமாய்ப்பார்த்து, திரிந்திட்டசாஸ்திரமும்சூத்திரமும்நிகண்டும்திறந்துமுதல் பலதொகையுந்தெரிந்துபார்த்தேன், திரிந்திட்டபண்டிதங்க ளிதற்கொவ்வாது சிவனுக்குசஞ்சீவியிந்நூல்பாரே. (கூளஅ)

பிளவைக்கு,

பாரப்பாபுடைத்தெழுந்த பிளவையோடு பலவீக்கஞ்சிலந்திக்குப்படுவனுக்கு, சீரப்பாசிறுகோட்டைப்பருப்புவாங்கிசிறந்தமுலைப்பால்நூறுதிறமாயாட்டி, வாரப்பாவேரண்டமவிச்சூற்றுந்தயிலம் வளமாகமுலைப்பாலுங் கூடச்சேர்த்து, போரப்பாசாரித்துசினமுகம்விட்டுபோடடாசற்றெருக்கப் போடுபோடே. (கூளகூ)

போடப்பாவந்திசந்திகாலந்தோறும் போற்றிடவேவற்றிப்போம்நீர்கொண்டுதானால், போடப்பாவனுதினமும் போடப்போடபுகைகளில்லைவீக்கத்தைமேலேயேற்றும், போடப்பாபுழுத்துடையும்விரணமாறும்புண்வாயில்சிலைதனை யூட்டிப்போடு, போடப்பாகாரங்கள்வைத்துப்பின்புபுரைபுண்களாறியே விழலாய்ப்போச்சே. (கூஅ௰)

அஞ்செண்ணெய்த்தயிலம்.

விழலாச்சுசன்னிக்கஞ்செண்ணெய்த்தயிலம் விளம்புகிறேன்புங்கயெண்ணெய் வேப்பயெண்ணெய், அழலாகுமெள்ளெண்ணெயிலுப்பையெண்ணெய்யாமணக்கினெண்ணெயிவையஞ்சுமப்பாதழலாகவொன்றாக்கிமருந்தைச்சேர்க்க சாத்தக்கேள்ரசங்கெந்தி தாளகமும்சிலையுமுழுகாகலிங்கமொருவகைக்குமிருகழஞ்சி யொக்கவேபழங்காடியூட்டியாட்டே. (கூஅக)

ஆட்டியேபழஞ்சீலைதன்னிலூட்டி யதிற்கிசைந்தகுறுங்கோல்திரியந்தமாக்கி, நீட்டியேயெண்ணெய்குத்தித் தீக்கொளுத்திதினைவோடேயெண்ணெய்களை வார்க்கும்போது, வீட்டிமையில்லாமையந்தமருந்துடனே தயிலம்விடவிடவேமூன்றுதிரம் விட்டிறங்கும், ஈட்டி

வைத்ததபிலமது கைகால்களிற்காசிளிடை தேய்க்கச்சன்னிகளுஞ்சீ
(௬௮௨)
தப்போமே.

ஓதமொடுசன்னி பதின்மூன்றுவாதம் திகையாதவுளைச்சலொடுதி
மிரல்வாங்கும், பேதமில்லைசன்னியொடு சயித்தியங்கள்தீரும் பிணியு
ள்ளோர்கதிநன்று பேணிவைக்கும், நீதமுள்ளசஞ்சீவிநோய்க்குமா
ர்பாணிநீங்காதபிணிநீங்கும் நித்தியசுகங்காணும், வேதமுறைக்கண்டு
சொன்னேன்சிறுசந்தனாதிவிசேஷமடா வைப்பதற்குமேகவெட்டை
(௬௮௩)
போமே,

மேகவட்டைநீரிழிவுகாசக்கூறு மிச்சுபித்தம்நெஞ்சரிப்பு வாய்
வுநீரேற்றம், போகமதிற்றூறுநாட்டம் வாதபித்தம்பிரதமை பிரண்டை
மூந்தநொந்திப்புப் பேர்பெரியகுன்ம, மாகமெல்லாமுதறிவிடுமிரும
லோடுஅதிசாரங்குடல் வாதமிகுதிவாத, மேகமாய்க்குத்தெடுக்குமு
ளைச்சலொடுவீக்க மெடுத்தபலஞ்சூலைகுட்ட மின்னம்வகையறியே

அறிவதுதான்சோகைபித்தம் காமாலைபாண்டு அரோசியொடுசி
ரோபாரம் அக்கினியின்மந்தங், குறிகுணங்கள்விகற்பமுள்ள பீனிசங்
கள்சுரங்கள் கூறரியநேத்திரநோய் க்ஷயங்கள்பலவொழிய, நெறியுட
னேபாடுகிறேன்சிறுசந்தனாதி நேர்த்தியாஞ்சூத்திரத்தி லறிந்துசெய்ய
பிரியாதரோகங்களனைத்தும் விழுந்தோடும்பிலத்தவிரு பத்தொன்று
(௬௮௫)
மேகம்போய்விடுமே.

சிறுசந்தனாதி.

போய்விடுமேவியாழகற்ப மருந்துவகைசொல்லப் புலத்தியனே
மச்சேந்திராகேளுகேளு, நேயமுடன்சந்தனமோர்பலமுங்கூட்டுநோ
தற்குவெட்டிவேர் நிறுத்திடப்பாய், வீயமுடன்சலம்பதக்கு விடுநா
லொன்றாய் வேகவைத்தபின்புவேரடகியாழம், மாயமுள்ளவில்வவே
ர்நீர்வள்ளிக்கிழங்கு அப்பனேநன்னாரி சிந்திமுத்தக்காச்சே. (௬௮௬)

முத்தக்காசல்லிகொட்டிநெய்தல் தாமரையின்மூலம் நிலப்பனை
க்கிழங்கு மிலாமிச்சம்வேரும், வித்தெதாருகூழுங்கொட்டிவேராலம்
விழுதுமேற்பொன்னாங்காணி வேராவரையின்பட்டை, இத்தொக்க
வகைக்குநாலரைப்பதமாக விடித்ததற்குள்சலமுமறுதாணிவிட்டு, சு
த்தொக்கக்காய்ச்சியது யெட்டொன்றாக்கி சுகமாகமுன்வைத்தகியா
(௬௮௭)
ழத்திற்கூட்டே.

கூட்டியபின்சாறுவகை சொல்லக்கேளு கூறியமுடக்கொத்தா
ன்வீழியொடுதான்றி, நாட்டிநீசொச்சியொடுமுருக்கிலை கற்றாழைநய
மாம்பொன்னாங்காணி நீர்வள்ளிக்கிழங்கு, மாட்டிவகைக்காறுபடியி
ளநீரவ்வண்ணமப்பனே தாழியொன்றிலடுப்பேற்றிக்காய்ச்சு, வீட்டி
மையில்லாமலதுயெட்டொணாக்கிவேடுகட்டிவடிகட்டிவிநாயகனைப்
(௬௮௮)
பணியே

பணிந்துவொருதாழிக்குமஞ்சள் காப்புகட்டிபாங்கான கியாழங்
கள்சாறுகளும்விட்டு, துணிந்துநீலேநல்லெண்ணெய் யாறுபடிவிட்டு

சொல்லரியவாவின்பாலில் வண்ணஞ்சேர்த்து, அணிந்ததிலேகற்கவ கையுரைக்கிறேன்பா ரகிற்கெந்தஞ்செஞ்சந்தன மல்லாற்கேளு, கனிந்ததொருசாதிக்காய் சாதிபத்திரிகிராம்பு கச்சோலமேலமிலவங்கங் காணே. (௬௮௯)

காணப்பாவங்கபத்திரிசித்தரத்தை கடுங்காரமஞ்சிட்டிவங்காள ப்பச்சை, பூணப்பாபேரீச்சுமுந்திரிகைப்பழமும் புழுக்கைவேர்சடா மாஞ்சிபூலாவின்கிழங்கும்,பேணப்பாசெவ்வள்ளிக்கொடிதேவதாரம் பேரீத்தசிறுசண்பகமுந்தாளிசபத்திரி, நாணப்பாகிளியூறல்குருசானி யோமம் நன்மதுரஞ்சிறுநாகப்பூவுஞ்சேரே. (௬௯௰)

சேரடாசாத்திரவேதியிருகழஞ்சி சேரவேதுளாக்கியிளநீரிலாட்டி, வாரடாஇளநீரில் குழப்பியொன்றாய் வளமாகத்தாழிக்குள்கலக்கியடுப்பேற்றி,பாரடாகமலவன்னிதீபவன்னியாலும் பற்றாமல்சிறுகொதியும் நாலுதினம்வைத்து, நீரடாகுறுக்கிவிடுமிளகுபதங்கண்டு நினைவோடேவடிக்கும்போ தப்பாகேளே. (௬௯௧)

கேளப்பாசாம்பிராணிகோஷ்டம் வகைக்காறுசெடியானஅவின் கழஞ்சிநாலரையுங்கூட்டி, நீளப்பாகுங்குமப்பூகோரோ சினையோடு நீள்வெள்ளிலோத்திரமும் வகைக்குமுக்கழஞ்சி, தூளப்பாவாட்டியதையோலைப்பூப்பாரத்தி தூவிவடிகூட்டுடனே கலசத்துள்ளே, நாளப்பாகஸ்தூரிபச்சைகற்பூரம் நற்புழுகுசட்டமிவை வகைக்குமுக்கழஞ்சே. (௬௯௨)

வகைமூன்றுங்கட்டியது விட்டொன்றாய் வடித்திருக்கும்தயிலம் வார்த்தாறவைத்து, பகையாமல்தேவிக்குங்கணபதிக்கும் பாங்காகப் பூசித்துத்தானியபுடம்வைத்து, திகையாமல்நாலுநாட்கொருக்கால்மூழ்குசீயக்காயரப்பிட்டு வெந்நீரும்விடுவாய், நகையாதபடியன்றுமோர் தயிர்பால் புளிப்புநல்விறைச்சிகைப்ப கற்றநலமாகும்பாரே. (௬௯௩)

பாரப்பாமற்றுநாள்கூட்டுவகைகூட்டு பத்தியங்களசடில்லைபறக்குமடாநோய்க,ளாரப்பாவிதின்பெருமை யறிந்தமட்டுஞ்சொன்னோம் ஆருக்கும்சொல்லாதே ஆச்சரியந்தன்னை, நேரப்பாவுள்ளவர்க்குச் சொன்னாலும்நன்று நினைவுகெட்டமாந்தரிடம் சொல்லவேண்டாம், காரப்பாபரையுடைய தியானங்கைக்கொண்டு கர்த்தாவையுள்ளவைத்தால் பலிக்குமிந்தநூலே. (௬௯௪)

## சுகபேதிசெந்தூரக்குழம்பு.

இந்துப்புநேர்வாளம்வகைக்குமிருகழஞ்சி யேரண்டஞ்சிறுமூத்துப்பருப்புமிதினிரட்டி, சிந்தையில்லாச்சாதிலிங்கம்கார மொவ்வோர்கழஞ்சிதிருக்கறவேசுத்திசெய்து கல்வத்திலரைக்க, தந்திரமாயிருசாமமரைத்துக்குழம்பதனைத் தனிச்சிமிழிலிட்டடைத்து தாக்கநீகேளு,

முந்தவொருகுன்றியிடையிஞ்சிச்சாறதனில்மிளகுடைய பொழுத்தில்
பனைவெல்லத்திலருந்தே. (சுகூரு)

அருந்தியனைநாழிகைக்குவெந்நீர்கொள்ள வபானத்திலுள்ளமல
மனைத்தும்போகும், வருந்தியேயாசனத்தை வெந்நீரால்சுத்திவயிறெ
டுப்பதெந்தமட்டும்விட்டுநீபார்த்து, திருந்தியதோராயாசமினித்தாங்
காதென்றால்சிறந்தகுளுந்தண்ணீரால் சுத்தியதுசெய்து, பொருந்திய
தோரன்னப்பால் குளிரப்பண்ணி புனைநீரவுப்பிட்டுகஞ்சிகொள்ளே.

கஞ்சிகொள்ளக்குளிர்ந்த சலத்தாலேபேதி கட்டிவிடும்பேதியி
ன்னங்காணவென்றால், தஞ்சமாவார்த்தகஞ்சி யுப்பிடாமல் தன்சூ
டாய்க்கொண்டிடவே பேதியாகு, மிஞ்சிக்கும்வெகுபேதிமுளகுபனை
வெல்லமெந்தமட்டும் பேதியாமியல்புண்டாகும், பஞ்சையாய்ப்பாட
வில்லையுண்மையாகும் பதியினின்று செய்வதற்குப்பலிதமாமே ()

பேதிக்குவாய்வுபத்திரன்.

ஆமப்பாபேதிகருவாய்வுபத்திர னறைகிறேன்புலத்தியனேமச்சு
கேந்திரா, நாமப்பாதிரிகடுகுகடுகுரோணிநலமானதெசாபுரம்வாய்வி
ளங்கம்வகைக்கு, வோமப்பாவிருகழஞ்சுநேர்வாளஞ்சுத்தியுற்றமுளை
களைந்தபருப்புக்கழஞ்சுபத்து, வேமப்பாவிருகழஞ்சியூஜச்சாற்றில்வி
ளைந்துயிருசாமமரை யுண்டைகட்டே. (சுகூஅ)

கட்டியதோர்குளிகையினை நிழலுலர்த்திக் கற்கொம்புச்சிமிழி
லேகடுகவைத்து, முட்டியதோர்வாய்வுமலங்கட்டுவாங்க முற்றியதோ
ரிஞ்சிதட்டிப்பிழிந்தசாற்றில், அட்டியில்லாதொருபோதுகுன்றிமொண்
டிடைதானதைத்துநீகொடுத்திடவேயாமமுதல்நீங்கும், வெட்டியல்ல
பனைவெல்லந்தனிலருந்த வெந்நீருங்கொண்டிடவே விரோசனமாம்
பாரே. (சுசுகூ)

சுகபேதியாழம்.

பாரப்பாசுகபேதியாழந்தன்னை பாடுகிறேன்பிரமியிலே கடுக்கா
ய்நாலு, பாரப்பாகளிப்பாக்குமூன்றுசுக்கிரண்டு பழிப்பற்றவித்தொ
ன்றுகழஞ்சியிதுவெல்லாம், பாரப்பாகியாழமொரு படிசலத்திற்போ
ட்டுபரிவாகவெட்டொன்றாய்க்குறுக்கிக்கொள்ளு, பாரப்பாபேதியுண்
டாமின்னமதிலொன்று பகருகிறேன்கற்கமொன்று பகருவேனே.

பகருகிறேன்பிரமியிலேநீங்கினாலும் பண்பாகமுன்போலேகழஞ்
சாய்சேர்த்து, பகருகிறேனிஞ்சிதட்டிப்பிழிந்தசாற்றில் பாங்காகத்தெ
ளிவிலேநால்வகையுமிறுத்து,பகருகிறேன்கலக்கியறிந்திருக்கால்பழ

மலமும்வாயுவெல்லாம் பறக்குங்கண்டாய், பகருகிறேன்கனபேதிக ண்டாலப்பாபாகமாய் மோரசனம்பண்ணிப்பாரே, (எ௱௧)

வச்சிரகபாடம்.

பாரப்பாதிறப்பதற்குவகைகையைச்சொன்னோம் பாடுகிறேனடை ப்பதற்குப்பண்பாய்மைந்தா, நேரப்பாவச்சிரகபாடங்கேளுநெடுநாளை மூலாத்தங்கிராணியதிசாரம், வேரப்பாமுளைமூலம் வயிறுளைச்சல்க டுப்புவீறடங்கச்சாதிக்காய் சாதிபத்திரிகிராம்பு,சீரப்பாவால்மிளகுயே லமுடன்சுக்கு திறமாகவகைக்குவிரு கழஞ்சிகூட்டே. (எ௱௨)

கூட்டடாவெட்பாலேசீரகந்தானிரண்டு கோரோசனைகோதில்லா விடையதிமதுரம், நாட்டடாவெந்தயமும்வகைக்குநாற்கழஞ்சிநலமா னவபின்மருந்து கழஞ்சியதாயோடு, வாட்டடாசிறுவருப்புவெதுப்பு வாங்கி மைந்தனேவெந்தயமோர் பலங்கியாழ, மாட்டடாகியாழம்வி ட்டுமருந்தை நன்றாயாட்டியதை யடையாகத்தட்டுவாயே. (எ௱௩)

தட்டியதோரடைக்குமொருசட்டிவைத்து தணல்மூட்டியடைய தனைதானேபோட்டு, விட்டினியகியாழததைச் சுறுக்குப்போட்டுவெ ந்தந்தக்கியாழத்தாலரைத்துப்பின்பு, அட்டியில்லாதாறுதிரஞ் சுறுக் குக்காட்டி யரைத்திடவேகபாட மருந்தாகுமப்பா, திட்டித்தவயணம் போற்சொன்னபடிகேட்கும் திறமாகவின்னமொருகபடாஞ்செய்யே

செய்துதான்சாதிக்காய்ஐங்கழஞ்சி சிறந்ததொருபத்திரியுமுக்க ழஞ்சி, பெய்துதான் கிராம்புமொருநாற்கழஞ்சி பெருமரத்துப்பட் டைத்தூளறுகழஞ்சி, யெய்துதான்குரோசாணியெழுகழஞ்சி யியம்பி யதோர்வெதிபாலேஐங்கழஞ்சு, உய்வதற்குக்கசகசா ஊமத்தின்வித்து மொவ்வொன்று முக்கழஞ்சி யுரைத்துப்போடே, (எ௱௫)

போடப்பாசடைக்கஞ்சா புடமேழுதிர்ந்தபொடியுமொருபதின் கழஞ்சிபொலிவாய்க்கூட்டி. யாடப்பவபின்மருந்து கழஞ்சிகூட்டிய ப்பளேயூமத்தஞ் சாற்றாலாட்டி, சூடப்பாகுளிகைசுண்டைக்காயளவு கட்டிசுகமாகநிழலுலர்த்தி சுண்டவைத்து, நாடப்பாவயிறுளைச்சல் கடுப்புவேதிகளுக்கு வயிற்றிரைச்சல் ரத்தமூலம்போமே. (எ௱௬)

போமப்பாவாறுவகைகிராணியதிசாரம் போவதற்குவனுபானம் புகலக்கேளு, வாயுவறுமுத்தக்காசிறுகழஞ்சிதட்டி மைந்தனேகியாழ மதுயெட்டொன்றாக்கி, வியமுடனேருண்டையரைத்துதட்டி விடி வேறுமப்படியே மூன்றுதினமருந்து, நேயமுடனிளவெந்நீர்தேன் மு லேப்பால்தன்னில் நின்றுவிடுமின்னவகை நிகழ்த்துவோமே. (எ௱எ)

ஓமமதுவடித்திறுத்துத்தேனிற்சேர்த்து வொருபோதுகொடுத் திடவேயோட்டம்நிற்கும், சாமமிருநான்கினுக்கு மெடுத்தபேர்க்குச் சாந்தமாயனுபானம்சாற்றக்கேளு, வேமமெனுமாம்பைப்பூ டவியி ல்சாற்றி யிருபோதுதேன்கலந்துவிட்டாயாகில், போமிந்தக்கிராணிய திசாரம்வயிற்றிரைச்சல் பொல்லாதகழிச்சல் ரத்தக்கடுப்பும்போம் பாரே, (௭௱௮)

கபாடலேகியம்.

வாறின்னம்பேதிக்குக்கபாடலேகியத்தை வழுத்துகிறேன்புலத் தியனேமச்சமுனிஐயா, பேருபடபெருமரத்துப் பட்டைசாரணைவேர் பிரண்டைவேரிலந்தைபட்டை கொடிவேலிவேரும், வேறுபடவழுக் கிருமரக்கிழங்கு நடலைவேர்க்கிழங்குவகைக்குமொரு பலந்தூளாக்கி கூறுபொடிவடிகட்டிகடை மருந்துவகையைக்கூறுகிறேன் நன்றாகக் கூறக்கேளே. (௭௱௯)

கூறினதோர்மிளகுசுக்கு அதிவிடையமோமம் குருசாணிசாதிக் காய்பத்திரிகிராம்பு, தேறினதோர்வெட்பாலையரிசி பலங்கால்தான்சி றந்தவபின்மருந்து மொருகழஞ்சியிவைவெதுப்பி, யாறினதோர்பொ டித்துவடிகொண்டிரண்டுபடியுமன்பாகவிஞ்சிச்சாறளாத்துப்படியும் றுத்து, ஆறினதோர்தெளிவதனிற் பனைவெல்லம்பலமூன் றடைத்த திலேபாகர்கக்காய்ச்சுமதுச்சிதமே. (௭௱௰)

உச்சிதமாய்ச்சேரவிழும்பருவமதிற் பொடிதானைழுகவேதூவி யதிற்கிளறிப்பின்பு, வெச்சிடும்பருவத்தில் தேனும்நறுநெய்யும்விடுவ கைக்குமாகாணிவிளாந்துகிண்டி, வச்சிடுவாய்புதுக்காந் தன்னில்மை ந்தாவகையறிந்து அந்திசந்திமூன்றுதினமருந்து, எச்சுகுடல்பொரு மல்மலப் பற்றமுழுண்டாக்கு மேற்பதுவும்பொரிகஞ்சி யியல்பாம் பாரே, (௭௱௰௧)

கபாடசூரணம்,

பாருமொருகபாடசூரணத்தைமைந்தா பண்பாகச்சொல்லுகிறே ம்பரிந்துகேளு, தீருகிறவியாதியதிகிராணிசாரம்தெளியாதவயிற்றுளை ச்சலசலக்கழிச்சலிரைச்சல், நேருகிறகுடல்பொருமல்தாபமொடுசோ பம்நிற்பதற்குமருந்துவகைநீதானென்றாய், சீருகிறகடைக்கஞ்சாபுட மேழுதீர்ந்தசிறந்ததொருசாதிககாய் சாதிபத்திரிகிராம்பே (௭௱௰௨)

பேரானயதிவிடையம்குறாசாணியோமம் பொடித்ததூள்பெரும ரத்துப்பட்டை முத்தக்காசு, வேரானசுக்குடன்மாதளம்பழத்திறோடு

வெட்பாலேயரிசிசமன் கழஞ்சிகூட்டி, காருணவபின்மருந்து கழஞ்சொன்றேயாகக் கடைமருந்துவெதுப்பியதைத் தூளதாக்கி, நேராக கலந்துசூரணம்திதப்பா நினைவறிந்துசெய்யவதினின்றுபோமே (எகரு)

நின்றுபோம்சூரணந்தான்வெருகடியைச்சேர்த்து நினைவோடேபிருபோதுகொள்வாயாகில், தின்றுவிடும்நோயையின்ன மனுபானங்கேள்தேனல்லபனைவெல்லம் சேர்த்தருந்தத்தீரும், வென்றியுள்ளதின்னமொருசூரணந்தான் விளம்புவேன்சாதிக்காய் பத்திரிகிராம்பு, இன்றினியகுருசானி வெட்பாலேயிஞ்சி யியல்பானபெருமாத்துப் பட்டைத்தூள்கூட்டே. (எகச)

கூட்டடாமலேதாங்கிவேர்முத்தக்காசு கொடியதொருவால்மிளகு அக்கிராகாரம், நீட்டடாசடாமாஞ்சிசுக்குவதிமதுரம் நினைவாகவகையதனுக்கிருகழஞ்சு, பூட்டடாவபின்மருந்து அரைக்கழஞ்சிவெதுப்பிபொடிசெய்துவெருகடிதான் தேனிலேபொசிக்க, மூட்டடாவந்திசந்திகியாழத்தில்செலுத்த மோசமில்லேகியாழவகை மொழிகிறேனே ()

மொழிகிறேன்மலேதாங்கிவேர்முத்தக்காசு முக்கியமாம்பெருமாத்துப்பட்டைசுக்குமிளகு, தெளிவாகவகைக்குமொரு கழஞ்சிகூட்டிச்செலமிரண்டுபடிவிட்டுக் கிராம்புபதினைந்து, வழியாகமுடிச்சிட்டுளெட்டொன்றாக வற்றவைத்துவதில்பாதி கிராம்பளைத்துககலக்கி, நெளியாமலந்திசந்தி மேற்பொடியும்போட்டுமூன்றுதினங்கொடுக்கநெய் சொல்லக்கேளே. (எகரு)

கபாடநெய்,

சொல்வோநாமீருள்ளியிருகழஞ்சி துணுக்காகநொறுக்கியொருசட்டியிலிட்டு, வல்வாயன்மணிப்பிரண்டைச் சாற்குறுக்கிட்டுவறுப்பதுதான்பொன்னிறமாய் வறும்போதப்பா, பல்விதநெய்பாகாதுபசுவிநெய்தான்விட்டுப் பதமறிந்துஇறக்கிரண்டுகாசிடைதானூட்ட, கொல்வமென்றுவந்தவெம தூதனையும்வெல்லும் கொடியதொருநெய்யையின்னம்கூறக்கேளே, (எகஎ)

கூறுவேனுயுருவியூமத்தங்கொழுந்து கொட்டைப்பாக்களவனைத்துவெவ்வேறேவைத்து, ஈறில்லாவீருள்ளிநொறுக்கியிருகழஞ்சிரண்டுவகைமுன்மருந்து மெருமைவெண்ணெயுழக்கு, மாறிலலாவெந்திறக்கிப்பதத்தில்வடித்திறக்கி மருத்துநெய்யுமருந்திடவே வளமாமப்பா, தேறிநன்றாய்த்தேறாது தெளியவின்னம் செப்புவேன்மைந்தாநீ தெளிந்துகொள்ளே, (எகஅ)

தெளிந்துகொள்ளவின்னமொருவகையைக்கேளு திறமானமிளகுமிருகழஞ்சியப்பா, கலிந்திடவேநுணுக்கியதூள்நல்லவெல்லஞ்சேர்

த்துக்கடுகவேவெருகடிதான் காலைசந்தி, யொழிந்துமொழியாததற்கி ன்னமொன்றுசொல்வோ முத்தகமனேமிளகுநறுநெய்யுமாட்டி, நெளி ந்திருக்கும்பேதிக்குங் கபாடஞ்சேர்த்து நீயருந்துகியாழங்கள் நிகழ்த் துவேனே- (எ௧௯)

அருளாதிகியாழம்.

நிகழ்த்துவேனருளாதிகியாழந்தன்னை நெடுநாளைமாதுளம்பழஞ் சாங்கமோடு,செகத்திலுள்ளபனைவேருமருங்காலிவேரும்சிறந்ததொ ருநீர்ப்பூலாவறுகம்வேரும், உகத்தவால்மிளகுமகிழ்மாம்பட்டைபலா வேரோங்குபெருமரப்பட்டை சிற்றேரண்டவேரும், அகதநியமுத்த க்காசுமில்வுகருவேல் மகிழ்பிசினும் வெட்பாலையரிசியுமோரிடையே.

ஓரிடையாய்க்கோட்டமது வகைக்குமுக்கழஞ்சி யொன்றாகவிடி த்தத்தூள்மூன்றுகூறிட்டு, நீருமிருநாழியினிலொருகூறிட்டு நீட்டிய திற்கிழிகட்டிப் போடவகைசொல்வோம், பேர்பெரியசாதிக்காய்கிரா ம்புசீரகமும் போனவதிவிடையம் குருசானியோமம், சாரமுடனாறு கிழிகட்டிரண்டு கிழியுந்தண்ணீரு மெட்டொன்றாய் தாக்கவரைத் திடுமே. (எ௨௧)

அரைத்தமருந்தப்போதிற்கியாழத்திற்கலக்கி யருந்திடுவாய்மூன் றுதினமடங்குமப்பா, திரைத்தவயிற்றிரைச்சல் ரத்தக்கடுப்புடன்சீயி வைகள்தீருதற்கு நேரிலந்தையாவரைவேர்ப்பட்டை, நரித்தனைபோ லிருந்தவிட்ணுகிரந்திமிளகுடனே நாட்டுவாயிருநாழிதண்ணீர்விட்டு க், கரைத்திடவேசாதிக்காய்கிராம்புசீரகமுங் கருத்துடனேகிழியாறு கட்டிரண்டுபோடே. (எ௨௨)

போட்டகிழிகியாழத்தையெட்டொன்றாக்கிப் புனிதமாயிருபோ துகிழியரைத்துக்கொடுக்க, சாட்டையில்லாபம்பரம்போ லாட்டிவரு ம்போது சாதகமாயின்னவகை சாற்றக்கேளு, வோட்டமெல்லாந்தவி ர்ப்பதற்கு விளாம்பலழத்திறோடு முற்பனஞ்சேர்மாதளையிறோடுங் கூட்டு, வாட்டமில்லாப்பூக்கைவேராறுகம்வேரும் மறுவில்லாவில்வ வேர்முத்தக்காசாமே. (எ௨௩)

ஆமடாவெட்பாலையரிசிநாயுருவி யதிவிடையமிளகுசம ஞெக்க நறுக்கியிட்டு, நாமடாசலமுமிருநாழி யெட்டொன்றாக்கி நறுந்தேனு ங்காசிடைதானந்திசந்திசேர்த்து, தோமடாசாதிக்காய் பத்திரிகிராம் புவோங்குமதிவிடையமுடன் குருசானியோமம், போமடாவெதுப் பியதுள்மேல்பொடியுந்தூவி பொல்லாதவயிறுளைச்சல் கடுப்புப்போ ய்விடுமே (எ௨௪)

போய்விடவேவயிற்றூரத்தங் கடுப்புளைச்சல்தனக்குப் புகழான வாவரையிலஞ்சுவகைகூட்டு,மாயவல்லிமோட்டுப்பூ கிராம்புசாதிக்கா ய்மகத்தானதூளுமது வகைகள்சமனாக, வீயமுடன்மோர்சட்டிவெடு கட்டியவித்து விரைத்தரைத்து எருமைமோர்தயிரிலூட்டு, நீயமாய்சி

ன்றுபோமின்னம் விசித்திரமாய் நிகழ்த்துவதுவுற்பனமாய்நீயறிந்து செய்யே. (எ௨ரு)

செய்யடாவின்னமொரு வியாழங்கேளு சிற்றரத்தைமலைதாங்கி வேர்பூநாகம், மெய்யடாபெருமாத்துப் பட்டைசமன்கூட்டி மேல்மருந்துகிராம்புபத்து கிழிகட்டிப்போடு, வையடாவிருநாழியெட்டொன்றுக்கி மைந்தனேகிழியதைத்துக் கலக்கியந்திசந்தி, கொய்யடாமூன்றுதினங்கொடுத்துநீயும் குடல்படுவன்பிளவை புடைத்தெழுந்தநோய்க்குழம்பே. (எ௨௬)

புண்களுக்குக்குழம்பு.

குழம்புபலப்புண்களுக்குச் சிலந்திக்கெல்லாம் கூறுவேன்சிறுகொட்டைப்பருப்பாழாக்கு, இளம்பிள்ளைமுலைப்பாலி லாட்டிவாங்கியிறக்கடாமுலைப்பாலு மோரண்டத்தயிலம்,வளம்பெறவேமத்திச்சுசிரட்டையொன்றில் வைத்தெந்தவீக்கமொடு பிளவைக்கெல்லாந், தளமுனையாய்முகம்போட்டுப் பக்கத்துக்கனத்திற் றடவிடவேவிதனம்விடும்தோன்றுதல்பெறுமே, (௨௨எ)

வற்றமல்நீர்கொண்டு பரந்துகனத்திருந்தால் வளையமாய்க்குழம்பதனைப்பூசுபூசு, வற்றமலெழும்பியேயுடையுமப்பா மறுபடியுஞ்சலமாகக்கழன்றுபோகும், வற்றதகுழம்பதனைச்சீலையூட்டி வாய்மேலேபோட்டபின்பு வளையப்பூசு, வற்றதசிலந்திபருப்படுவன்வீக்கம் வன்பிளவைபுடைத்ததெல்லாம் வளமாய்ச்செய்யே. (எ௨அ)

சவ்வீரக்குழம்பு.

செய்யடாசவ்வீரக்குழம்புதன்னைத் திறமாகவோர்கழஞ்சு சிந்தூரமல், பையடாநுணுக்கியபின் றவின்வெண்ணெய் படிகால்தண்ணீர்வாங்கிப்பண்பாய்க்கூட்டி, நையடாவிருசாமமொன்றயாட்டிநலமானபரணியிலே யடைத்துவைத்து, வையடாபிளவைமுதல்மார்பிலாணிமகத்தானபுண்பொடிக ளாறுந்தானே. (எ௨௯)

ஆறுந்தானிக்குழம்பிலெல்லாம்போகு மப்பனேபழங்காடிபுளியிலைவெந்து, கூறுகவந்திசந்திகாடியாற்கழுவிக் கூட்டுவாய்சீலைகொண்டுஅந்நீர்மாற்றி, வேறுபடியிளச்சீலை களிம்பையூட்டி விரைந்துநீபோடுபுண்களாறுமட்டுந்,தாறுமாறாய்ப்புரையும்புண்ணுமாறித்தழும்புகருத்தவர்ந்துவிடுந் தண்மைபாரே. (எ௩௰)

தண்மையாய்ச்சொல்லிவிட்டோ மடக்கம்விட்டு சாத்திரத்தையொருவருக்குங் காட்டவேண்டாம், உண்மையாய்ப்பட்சத்தோர்க்குரைக்கநன்றுவுத்தமியாள்தெசதீட்சைக் குள்ளோசொக்கி, வண்மையாய்க்கபடற்றபேர்க்குமைந்தாவகைபிரித்துக்காட்டிநல்மகிமையுண்டு,

